உ

கடவுள்துணை.

சிவசுப்பிரமணியர் மணம்புணர்ந்த

# வள்ளியம்மை நாடகம்

மதுரைஜில்லா

எட்டியாபுரம்-சமஸ்தானவித்துவான்

**கடிகை-முத்துசாமிப்புலவர்**

மாணாக்கராகிய முத்துவீரக்கவிஞர்

இயற்றியது.

—*—

இஃது,

கோகுலாபுரம்

**அருணாசலமுதலியாரால்**

பார்வையிடப்பட்டு

—(*)—

திருநெல்வேலிப்பேட்டை

**வ-மகுதாருவுத்தர்**

அவர்களால்

கொன்னூர்

**மாணிக்கமுதலியார்**

கம்பேனியாரவர்களது

மனோன்மணிவிலாசவச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

யுவ௵—ஆனி௴.



நம்பிராஜன்.



நங்கைமோகினி.



வள்ளியம்மை.



சுப்பிரமணியர்.



நாரதர்.





கடவுள் துணை.

# வள்ளியம்மைநாடகம்.

### விநாயகர் துதி வெண்பா.

திங்களணிசெஞ்சடையன் செல்வனைவேயிலகுந்
துங்கவைங்கரன்றனையே துதித்துப் — பொங்குமுடன்
வள்ளியம்மைநாடகத்தை மாநிலத்தியம்புதற்குக்
கள்ளமில்லாக்கணபதியின் காப்பு.

### இதுவுமது விருத்தம்

மதுராசந்தமிழ்ந்தழைந்து விளைந்தநாடு
வளம்பெருகுங்கழுகுமலை தன்னில்வாழும்
சதிர்பெருகுமந்த்ரசடா க்ஷரகுமாரன்
சண்முகவேள்மணந்தவள்ளி சரிதைதன்னை
விதிமுறைநூல்தெரிந்திசைநாடகமாய்ப்பாடி
மேதினியிலெலார்துதித்து விளங்கவேண்டி
அதிகமதமொழுகுதந்தி முகத்தோன்றொந்தி
ஐங்கரவிநாயகன்பொன் னடிகாப்பாமே

### முருகர்-துதி-விருத்தம்;

திருலவும்பங்கயப்பூமாதுசேர்ந்து
செழித்துவளம்பொருந்திவளர் சிவசம்பாதி
தாருலவுஞானசிவ சுப்ரமன்னியர்
தழுவுமணம்புணர்ந்தசவுந்தரவிலாச
வாருலவுகொங்கையின்றாள் வள்ளியம்மை
மகிமைபெறுநாடகத்தை வளமாய்க்கூற
காருலவுங்கழுகுமலை தன்னில்வாழுங்
கங்கேயனிருபதத்தைக் கருத்தில்வைப்பாம்

### சிவன்-உமையவள்-துதி-விருத்தம்.

துதிக்குதவும்புண்ணிய சகாயனெங்கள்
சம்பாதிகழுகுமலைதன்னில்வாழுஞ்
சதிக்கடவுள்குருபரசண் முகக்குமார
கந்தவேள்புணர்ந்தவள்ளிக்கனியைவெள்ளை
மதிக்குநிகர்முகம்விளங்கும் விழியாள்சுந்தர
வையகத்தோர்புகழ்ந்திடநாடகமாய்ப்பாடத்

துதிக்கமதிநதிமுடிக்குஞ் சடையோன்ஞான
சுந்தரசம்புவுமுயர்பதந்துதிப்பாம்

அவையடக்கம்-விருத்தம்.

கஞ்சமலர்த்தடஞ்சூழுஞ்சிவசம்பாதி
கடவுள்சம்புலிங்கர்மனங் கசிந்துமேவும்
கொஞ்சுகிளிமொழியகிலாண் டவடன்பாலன்
குழந்தைவடிவேலன்மணம் புணர்ந்தமாது
வஞ்சிகுறவள்ளிநாடகம்யான்பாட
வையகத்திற்கற்றறிந்தோர் குறவோர்மூத்தோர்
மிஞ்சுதமிழ்ப்புலவரிதிற் பிழைகண்டாலும்
வேலர்சரித்திரமென்றே விளம்புவாரே

இதுவுமது.

திருவளர்தாரணவருடமகரமாதஞ் - சிறந்தவெள்ளிரோகணி நட்சத்திரத்தில், கருணைமுருகனைப்பணியுங்கந்தசாமிக் கவிஞன்புத்திரன்சம்பன்னன்மேன்மை, குருமுநிக்குநிகர்கடிகை முத்துசாமி- குருவினுபதேசமுத்துவீரப்பேந்திரன், பருவமதன்வள்ளிநாடகத்தைநன்றாய்ப்- பாடினன்சேபனங்கொண் டாடினனே.

விநாயகர்வருகிற-பொதுவிருத்தம்.

சொற்பொருட்குதவுஞான சுந்தரக்குமாரன்மேவும்
அற்புதக்கதியாம்வள்ளி யம்மைநாடகங்கொண்டாடப்
பொற்பதவரத்தான்நீறு பொருந்துமைங்கரத்தான்றெய்வ
கற்பகமுகத்தான்றொந்திக் கணபதிதோன்றினாரே

விநாயகர்வருகிற-தரு-இ-ம்-புந்நாகவராளி-ஆதிதாளம்.

நாயகர்தோன்றினரே மந்த்ரவிநாயகர்தோன்றினரே.
நாயகர்தோன்றி சகாயனெனவாசன்
நேயன்கணபதி யாயன்மருகனென்னும் (நாய)

ஐந்துமணிபுயத்தான்-விகசித-தொந்திபெரும்வயற்றான்
தந்தியினதமுகத்தான் விதிமுச்-சந்தியுறஞ்சுகத்தான்
விந்தைவிகசிதநர்த்தமிகுமதஞ் சிந்தபுளகிமந்த்ரகிரீபாகா (நா)

தேவர்பணியும்வாசன்-கைலைமகா-தேவர்குருநேசன்
பூவினிலுபதேசன் தமிழுக்கு நாவுந்தந்திடுமீசன்
தேவியாம்வல்லபைமேவியவல்லவன் மூவுலகுதனிலுலாவிய
செல்வன் (நாய)

வெள்ளிமலையின்வேடர்-உதவிய-வள்ளியின்கதைபாட
தெள்ளியதமிழ்நாட-நயந்துயர்-தள்ளியேநலந்தேட
வெள்ளைக்கிரணமதி பிள்ளைக்கிளைமருப்பு - வெள்ளையாசடிப்
பிள்ளைக்கணபதி. (நாய)

குருக்கள்வருகிற-பொது-விருத்தம்,

காங்கேயன்கழுகுமலைக் கந்தவேளை
கலந்தவள்ளித்தாயினிட கதைக்குமேன்மை
யோங்கியமூலப்பொருளாய் வந்தெந்நாவி
லுந்தவுகணபதியெனுநற் பிள்ளையார்க்கு
மாங்கநியும்பொரிகடலை பழந்தேங்காயும்
மாலையுஞ்சந்தன தூபதீபமுங்கை
தாங்கிமெல்ல நடந்துமந்த்ர வேதஞ்சொல்லி
சரவணப்பட்டருஞ்சபையிற்றான்வந்தாரே

குருக்கள்வருகிற-தரு-இ-ம்-மத்தியமாவதி ஆதிதாளம்.

சோதியாம்வெண்மை விபூதியும்பூசி-சுகந்தபரிமளமுகந்துமேசா
தியின் முறையாய் வேதங்களோதுஞ் - சரவணப்பட்டருந் தோ
ன்றினர்,
வாத்யமுழங்கவெ வேத்தியங்கொண்டுமடித்த சோமனுமுடுத்தி
யே, சாத்திரம்பொய்யாத் தோத்திரஞ்செய்யுஞ் சரவணப்பட்ட
ருந், தோன்றினரே
மூஷிகவாகனமோதகஅஸ்தனும் போதக்கணபதி நாதனுக்கே
தாசனென்றேசிவபூஜைகள்செய்யுஞ் சரவணப்பட்டருந்
தோன்றினர். குருக்கள்சொல் ஸ்லோகம்.
சுக்லாம்பரதரம்விஷ்ணும் சசிவர்ணம்சதுர்ப்புஜ பிரசன்ன
வதனந்தியாயே சர்வவிக்நோபசாந்தயே.

விநாயகர் அர்ச்சனை-வசனம்.

ஓம்-கஜமுகாயநமா ஓம் லம்போதராயநமா ஓம் - விகடாயந
மா-ஓம் விக்னவிநாயகாயநமா- ஓம்கணதிபதேநமா-ஓம்- காமா
ட்சிசுதாயநமா-ஓம்-சாமளவர்ணாயநமா-ஓம் சங்குசக்கிராயுதநமா
ஓம்பிரணவசொரூபாயநமா-ஓம்- மூலாதாரபீடாயாநமா-ஓம்- மு
த்திசொருபாயநமா- ஓம்- விபூதிநானாவித கெந்தபரிமளபுஷ்ப
தூபதீப நைவேத்தியந் தாம்பூலஞ்சமர்ப்பயாமி.

கட்டியக்காரன் வருகிற-பொதுவிருத்தம்.

சட்டமிட்டாடித்தோகை தனைவிரித்திசையாய்கூவி
வட்டமிட்டுலாவும்புள்ளி மயில்மிசையேறுமுன்னங்
கொட்டமிட்டசுரரைவென்ற குமரவேள்கதைக்குநன்றாய்
கட்டுமெட்டாகப்பாடி கட்டியக்காரன்வந்தான்

கட்டியக்காரன்வருகிற-தரு இ-ம் மோகநம்-அடதாளம்.

மந்திரவெண்ணீறணிந்து-வல்லபஞ்சொல்லத்துணிந்து
சுந்தனைநாடிப்பணிந்து கட்டியக்காரனுந் தோன்றினான்
தலக்கமாய் சிங்காரப்பெட்டு சுந்தரசிஜாருந்தொட்டு

கலக்கமில்லாதமெட்டு கட்டியக்காரன் தோன்றினான்
ஓங்குமீசைமுறுக்கி ஒன்னலரைக்கண்டுறுக்கி
தாங்குகச்சையிறுக்கி கட்டியக்காரன் தோன்றினான்
பழமைக்கதைகள்பேசி பழகுமந்திரவாள்வீசி
களபசவ்வாதுபூசிக் கட்டியக்காரன் தோன்றினான்

கட்டியக்காரன்சொல்-பொதுவிருத்தம்.

வள்ளுபுகழ்கழுகுமலைதன்னில்வாழும்- வேலர்சிவசுப்ரமண்ணிய குமாரக்கந்தன், புள்ளிமயிலேறியெழுபுவியைக்காக்கும்-பூரணசெவ்வேள்முருகன் பொருந்துநாட்டில், வெள்ளிமலைச்சிற்றூருக் குடிசில்வாழும்- வேடுவர்கானவர்கள்குன்றக் குறவர்கோமான்-வள்ளலெனப்பெயர்படைத்த நம்பிராஜன்- வளமைபெறுந்திருக்கொலுவில் வருகின்றானே.

வசனம்,

அகோதெப்படியென்றால்- இந்தப்படிக்கு கழுகாசலசுப்பிரமணியக்கடவுள் பொருந்தியிருக்கும்நாட்டில்வெள்ளிமலை சிற்றூரைச்சேர்ந்தநாட்டில் வேடர் வில்லியர் குறவர்களுக்கு இராஜாதி இராஜனாகிய நம்பியமகாராஜன் கொலுவுக்குவருகிறவிதம் எப்படியென்றால்,

நம்பிராஜன்-வருகிற-தரு இ-ம் கியால்-ஆதிதாளம்.

சோதிவயிடூரியக்கோமேதக மிலங்க
சொர்ணமணிமகுடமுடிமின்னிய துலங்க
தாதுலவும்மார்பில் முத்துத்தாவடங் குலுங்க
தாசாதிதாசன்போல்நம்பி ராஜனும்வந்தானே
அம்புவில்லுந்தூணீரமும் கொம்புகளும மெடுத்து
ஆக்ரமதாகவெகுபராக்ரமுந் தொடுத்து
கும்புபெரும்வேடுவரைக்கூட்டிவனுக் கொடுத்து
குரிசில்நம்பிராஜேந்திரன் விரைவுடன்வந்தானே
பளபளென்னச்சரிகைபூங்கிபட்டைநடுக் கட்டும்
பதித்தமுத்துக்கடுக்கனும்பார்த்தபுய மெட்டும்
களபமணம்பொருந்துந்துகிர்கலவைமணிப் பட்டும்
தாரணிபோர்புகழ்நம்பி ராஜனும்வந்தானே
ஓவியமுத்தொழுகியபற்காவியொளி தெரிய
உரமுறுஞ்சிங்கமிவனென்றுலகுமெங்கு மறிய
தாவும்மயிலேறசண்முககுகனுக் குரிய
தாசன்விசுவாசன்நம்பி ராசனும்வந்தானே
திலகதிலயங்கிதொட்டுதொங்கல்முரு கணிந்து
சந்தனஞ்சவ்வாதணிந்துசிந்தூரமு மணிந்து
மங்களகல்யாணமறைவேதியனைப் பணிந்து
வாசவிசுவாசநம்பி ராசனும்வந்தானே

இராசன்சொல்-போற்றிவிருத்தம்.

வேதமாய்முடிவாய்சோதி விண்ணிலாநர்த்தமாகி
நாதமாய்பித்துமாகி நானிலத்துயிர்களாகி
பூதமுமைந்தாமாகி புலனுமாய்பொறியுமாகி
தீதிலாநின்றவீசன் சேயாம்செவ்வேளேபோற்றி

இதுவுமது-விருத்தம்.

கனவண்டிலைசேர்போற்கூவுங் கட்டியக்காரகேளாய்
சுகமதிநிறத்தாள்வால சுந்தரியென்றுந்திவ்ய
முகவஜிகாத்தாள்நங்கை மோகினிப்பெண்றுடன்னே
மகிமைசேர்கொலுமுன்பாக மகிழ்ந்தினியழைத்துவாராய்

(வ-ம்) அகோவாரும் காவல்கட்டியக்காரா நமதுசபைக்குளன்று சுயபத்தினியாகிய நங்கைமோகினிப்பெண்ணை அதிசீக்கிரமாக அழைத்துவாரும்பிள்ளாய், (கட்டி-வ-ம்) அப்படியே அழைத்துவருகிறேனையா சுவாமி.

கட்டியக்காரன்-நங்கைமோகினிக்குச்சொல்-விருத்தம்

நல்லதென்றேயிக்கட்டியன் நளிர்மதிதவழுமாடத்
தன்னுறங்குழலாள் நங்கை பதிவையைப்பணிந்துபோற்றி
ஒல்லையிலும்மைவெங்கோ னுயர்கொலுக்கழையுமென்றான்
மெல்லியேவாருமென்ன விரைந்தவள்வருகின்றாளே

(வ-ம்) சரணம்சரணமம்மாதாயே நமதுஇராஜாதி இராஜனாகிய நம்பியமகாராஜன் கொலுவிற்கு தங்களை அதிசீக்கிரமாக அழைத்துவரச்சொன்னார் வாருமம்மாதாயே (நங்கை-வ-ம்-) நல்லதுஅப்படியே வருகிறேன் நடவும்பிள்ளாய்,

பொது-விருத்தம்.

கங்கைசூழ்வளஞ்சேர்வள்ளிக் கைலைமாமலையிலுள்ள
சிங்கவேடுவர்கள்கோமான் சிறுகுடிநம்பிராஜன்
மங்களமனைவியானவஞ்சிரஞ்சிதவிஸ்தார
நங்கைமோகினிப்பெண்வந்து நலமுடன்தோன்றினாளே

நங்கைமோகினிவருகிற தரு-இ-ம் - புந்நாகவராளி - ஆதிதாளம்

நங்கைமோகினியும்வந்தாள் கொலுநடுவில்
நங்கைமோகினியும்வந்தாள்
மங்களமொழிபேசி மாதுநன்விசுவாசி (நங்)
பிச்சிசெண்பகஞ்சூடி நல்லமணப்
பெண்களுடனேகூடி
உச்சிதத்தமிழ்பாடி உத்தமிநலந்தேடி (நங்)
குந்தளவோலையிலங்க முத்துமணிக்
கோர்வைத்தாவடங்குலுங்க

சந்திரமுகமிலங்க காவிற்றண்டை துலங்க (நம்)

அன்னம்போல்நடைவஞ்சி மங்கைக்
காசிபோல்மொழிமிஞ்சி
கன்னிமாருடன்கொஞ்சிக் காமாதியும்வஞ்சி (நம்)

கஸ்தூரிமஞ்சள்பூசி மணிக்கடக
கையில்வளைகள்வீசி
விஸ்தாரமாகப்பேசி விளங்குமகராசி (நம்)

நண்ணுவோர்க்குபகாரி சித்தூர்நம்பி
ராஜன்மேவியபாரி
புண்யபூசிதக்காரி புத்தியிலதிகாரி (நம்)

நங்கைமோகினிசொல்-விருத்தம்,

வேடர்குன்றவர்கோமானே வெள்ளியங்கிரிவாழ்வேந்தே
ஆடவர்க்கரசேஎன்மே லருமைக்காதலனே கேளீர்
கூடியும்நமக்கேயோர் குழந்தையில்லாதபாக்யந்
தேடியும்பலனொன்றில்லை செய்தவக்குறைதோயாமன்று

வசனம்

சரணஞ்சரணமென்பிராணநாதா தாங்கள் என்னைகொலு விற்குவரும்படிசெய்தகாரணமென்ன நல்லதுஇப்போது நமது குறைதீரும்பொருட்டு ஒருபெண்குழந்தை யில்லாதபாக்கியம்ஒ ருபாக்கியமோ என்னசெய்வோம் பிராணநாதா,

நங்கைமோகினி-புலம்பல் கண்ணிகள்,

இ-ம்-முகாரி-தாளம்-ரூபகம்,

விள்ளுபுகழ்நாட்டுவோரே என்னை மேவுகின்ற வாடவரே
வெள்ளிவரைதன்னவரே என்னை மேவுகின்ற மன்னவரே
எப்படிவாழ்ந்தும்பெண்பிள்ளை நமக்கில்லையேஇதென்னதொல்லை
கைப்பிடித்தவேளைதானோ பெண் கண்மணியில்லாத தேனோ
வேலவனன்னாட்டிற்சேர்ந்தும்நாம்வெள்ளியங்கிரியில்வாழ்ந்தும்
பாலனுமில்லாதிருக்க ஐயோ பண்டுவிதிப்படி தானோ
சத்தகன்னிமாரேதாயே மலை சாத்தாவேதம் பிரானே
புத்திரிவேண்டிநாங்கள் இப்போ புலம்புவதுங்கேட் கொணு
தோ, வல்லமைத்தெய்வமேகேளீர் நல்ல வனப்பேச்சி பத்ரகாளி
இல்லிலொருபெண்குழந்தைஇப்போதெங்களுக்கருளொணுதோ
வையகத்துமிருக்கவில்லை நாங்கள் வாய்கட்டினதோஷந் தானோ
கையிணைத்துமுத்தமிடப்பெண் கண்மணியில்லாத தேனோ
தென்குறிஞ்சிவேலவனே வள் திருவருளைக் காவலாயே
அன்புடனோர்பெண்குழந்தை எனக் கருமையாயரு ளொணுதோ

பொது-சற்தவிருத்தம்,

சித்ரநங்கைமோகினிப்பெண் சிந்தைகூர்ந்து
தெளிந்துநம்பிராசனோடு மொழிந்தேயோர்பெண்
புத்ரியில்லையினிநாமென் செய்வோமென்று
புலம்புவதைமனதில்நன்றாய் பொருந்தக்கேட்டு
மெத்தமனமகிழ்ந்து தர்ம்மதெய்வமாக
விசையவெள்ளிமலையி னெட்டு திசையைக்காக்குஞ்
சத்தகன்னிமார்கணங்கை துயரந்தீர்க்கத்
தாயெனவேதயவாகத் தாம்வந்தாரே,

வசனம்.

இந்தப்பிரகாரம் நம்பிராஜனிடத்தில் நங்கை மோகினி பெண் குழந்தையில்லையென்று புலம்பும்போது அவ்விடம் வெள்ளிமலையில்வாசஞ்செய்யும் சத்தகன்னிகள் வருகிறவிதங்காண்க,

சத்தகன்னிகள்-வருகிற-தரு-இ-ம்-புன்னாகவாளி
ஆதிதாளம்,

கைலைமலையிற்பூங் காவிலெழுந்து
கருணைபொழியுந்தெய்வ கன்னியர்மனத்
தயவுபொருந்துந்தெய்வ மின்னார்கள்மலை
சத்தகன்னியர்வந்துதோன் றினரே
நங்கைமோகினிப்பெண் குழந்தையைவேண்டி
நம்பிராசனுடன் புலம்பியபோது
சங்கைபொருந்துந்தெய்வ மங்கையர்னுமலை
சத்தகன்னியர்வந்துதோன் றினரே

சத்தகன்னியர்- விருத்தம்,

சேர்ந்தகன்னிமார்கள்வந்து சேர்வைகாட்டி
சித்ரநங்கைமோகினியைப் பார்த்துசொல்வார்
கூர்ந்துநம்மைகுறித்துமனம் வருந்தியேபெண்
குழந்தையில்லையென்றுசொன்னகுறையைக்கேட்டு
சார்ந்துனதுயிருப்பிடத்தைத் தேடிவந்தோம்
சலியாதேமெலியாதே சாற்றக்கேளு
போந்துனக்குயீசர்தன் கற்பனையினாலே
புனத்திலொருபெண் குழந்தையிருக்குதானே,

இதுவுமது,

தானேநின்வயற்றினிற் பெண்கருவேயில்லை
சலியாதேஆதிவிதிப்படியாலிந்த
காறுறுவனத்திலிற் நாளிலேஞ்சூற்
காரணத்தால்நடந்தசேதிக் காட்டும்புள்ளி
மானேபோர்பெண்குழந்தை மணிப்போர்பெற்று

வளரவுங்கையாலெடுத்து வளர்ப்பாயென்றே
ஆனதெய்வமங்கையர்க ளுரைக்கப்போக
அயிர்தநங்கையகமகிழ்ந்தங் கிருக்கின்றாளே,

பொதுவசனம்.

இந்தப்பிரகாரம் தேவகன்னிகள் நங்கைமோகினிக்குப்பெண் குழந்தைவரும் விதத்தைச்சொல்லி வெள்ளியங்கிரியில் சென்றபின் அவ்விடம்வனத்தில் கலைக்கோட்டுமகாமுனி வருகிறவிதங் காண்க,

கலைக்கோட்டு-மகாமுனிவருகிற- விருத்தம்,

தேகமெல்லாந்தவளவெண்ணீறுபூசிக்காதில்
திருக்குழைகட்பூண்டுசடைமுடியுங்கொண்டு
வாகுபெறுங்காவிவஸ்திரமருங்கிற்சேர்த்து
மந்திரத்தாற்கட்டியவொட்டியாணம்பூண்டு
ஆகமுறைதற்பமுறையதுதானுண்டு
ஆதிமறைநான்குமுணர்ந்தருள்சேர்ஞான
யோககலைக்கோட்டுமுநிபிரம்மைக்கையி
லூன்றினன்றிருக்காவிற்றோன்றினனே,

கலைக்கோட்டு-மகாமுநிவர் வருகிற-தரு-இ-ம்- மாஞ்சி ஏகதாளம்,

கலைக்கோட்டு முநிவர் வந்தார் தெண்டகாருண்ய
கலைக்கோட்டு முநிவர் வந்தார்
முலைக்கோட்டுமடந்தையர் மோகவலையிற்சிக்கி
தலைக்கட்டிலிருந்து மலைக்காட்டுவனந்தனில் (கலை)
மார்பில்ருத்ராக்ஷங் குலுங்க-கையிற்செப
மணித்தாவடமுந் - துலங்க
பேர்பெறும்புலித்தோலும் பிடித்தமாத்திரைக்கோலும்
சீர்பெறும்பூணூலுஞ்சேர்ந்த நிர்ணயத்தாலும் (கலை)
உச்சியிற்றிருக்கொம்பும்| கலைமுகமும்
ஓங்குங்கையினிற்பிரம்பும்
வச்சிரமானதேக மானிடரூபமாகவும்
இச்சையுடனேகாவி யிருந்துதவங்கள்-செய்யும் (கலை)

விருத்தம்,

தெளிவுறக்கும்வெள்ளிமலை வஞ்சிநாட்டில்
செழித்தவழில்மலைகுறிஞ்சி நிலத்திலேதான்
கானகத்திலிருந்துகனி புசித்துலாவிக்
கதிபெறுமாயாசதவ வேடங்கொண்டு
மோனமுற்றகலைக்கோட்டு முநிவரங்கு
முற்கலையிம்படியாலே முறையாய்வேத
ஞானநிட்டைதனைநோக்கி யிருந்திடாது
தன்னினார்மோகமதை யெண்ணினாரே.

பொது விருத்தம்.

தின்னயமுநிவரிங்குநிலைதவிர்ந்தருகிவாடி
கன்னியராஜாபாசங்களுத்தினிலிருக்கும்போது
தன்னிளஞ்சோலைதன்னிற் றனியொருபுள்ளிமானும்
நன்னயகலையைத்தேடி நாடியும்வந்ததன்றே

வசனம்.

இந்தப்பிரகாரம் வெள்ளிமலைச் சாரலில் ஒரு நந்தவனத்தில் தவஞ்செய்யவந்த கலைக்கோட்டுமகாமுனிவர்காமவிகாரங்கொண்டிருக்கும்போது அவ்விடமொருபுள்ளிமான் கலைமானைத்தேடிவருகிறவிதங்காண்க.

மான் வருகிற-தரு-இ-ம-பந்துவராளி-ஆதிதாளம்-

மானும்வந்ததே புள்ளிமானும் வந்ததே

கான்மிகுந்தபூமலிந்த-காவனந்தனிற்சிறந்த (மானும்)

மெய்யுறவாடி-மேவியேகூடி-கைவிடாதோடிக்- கலைதனைத்தேடி (மானும்)

வனந்தனின்மேவி-வாவியுலாவி கனிந்துசொற்றேவி - கலைதனைத்தாவி (மானும்)

பொன்னிறமானின்-புகழ்தருமேனி- உன்னியம்வானி- துயர்வுறக்கானில் (மானும்)

விருத்தம்-

விளைவுறுஞ்செந்தேன்வடிந்து மலரேபூர்த்து
விரைமிகுந்தவெள்ளிமலைக் கருகேநின்று
குளிர்ந்தரசக்கனிபுசித்து மயல்பூரித்துக்
கொண்டுகலைக்கோட்டுமுநி கண்டுமானைத்
தழுவரிஷிசெற்பமிராத்தங்காதென்ற
தகைமையினாலேசெற்பந்தாங்கிமானும்
பிழையகற்றும்வேதவிதிப் படியாலங்கோர்
பெண்குழந்தையீன்றிடவும் பெயருண்டாச்சே

பொது-விருத்தம்.

ஈருண்டமகவுதனை யீன்றுமானும்
திரும்பவும்பாராமல்வனமோடிப்போக
பாருண்டாகியபூமாதேவித்தாங்கிப்
பழுதறப்பிள்ளையைப்பாதுகாக்கும்போது
காருண்டாம்வெள்ளிமலைக் குறவர்கூடி
கானில்வள்ளிக்கிழங்குவெட்டக் கதித்தெல்லோரும்
நேருண்டாமிந்தவனந் தன்னைத்தேடி
நிரைநிரையாய்க்குறத்திகுறவர்கள்வந்தாரே

வசனம்.

அகோதெப்படியென்றால் கானகத்தில்வந்த புள்ளிமானைக் கலைக்கோட்டு மகாமுனிவர் காமவிகாரத்தால்சேர்ந்து சென்றபின் அந்தமான்வயிற்றிலுதித்தப் பெண்குழந்தை அவ்விடமிருக்கும்போது அங்கேவள்ளியமலைக்குறவர் குறத்திகள் வள்ளிக்கிழங்கு வெட்ட-வருகிறவிதங்காண்க.

குறத்திகள்-குறவர்-வருகிற-கண்ணிகள்-இ-ம்-குறவஞ்சி ஆதிதாளம்

குறத்திகள்குன்றவர்கானக் குறவர்களுங்கூடி மனங்
கூர்ந்துபலகிழங்குவெட்டச்சேர்ந்துவனந்தேடி
உறவுசொல்லிக்கூடிக்கூடி யொருவர்க்கொருவர்பேசி தொடர்ந்
தோடியோடிக்கூடையுங்கொண்டுகைத்துகளைவீசி
குப்பல்குப்பலாய்கிழங்கிருக்கிறதுகுச்சிலியமலைகிளரு நமது
குத்துக்கம்புக்குநீங்கிவிடாததைவிட்டுவிட்டங்கேதள்ளு
அப்பாலோடிக்கிழங்குகெல்லுவோமதிசீக்கிரமாய் வாரும்ஐயா
ஆடியோடிச்சன்னைப்பேசிக்கூடியேவந்துசேரும்
சிறுகிளங்கும்பிடிகிளங்குஞ் சீனிக்கிளங்கெடுத்து வேடர்
சேகரித்தவரவர்கள் கூடைகளினில்விடுத்து
வரிசையொடுபலகிளங்கு வைத்துதென்று கொண்டார்கொண்டு
வருகும்போதுவனந்தனிலேமதலைதனைக்கண்டார்
அதிசயமாய்வனத்திற் பிள்ளையழுங்குரலுமேது அங்கே
அடித்தடித்துவாருங்கள் நாமறியலாமிப்போது
ஏதுவகையோவனத்திற்பிள்ளையீல்றதுவும்பாரோ இப்போ
இக்குளந்தையையெதிர்த்துவிட்டெங்கேகினதெவ்வாரோ
சிறம்புலியானைகுழச் செடிகளடரும்வனத்து ஒரு
சிறுகுளந்தையளுதளுது தியங்குதையோறனித்து
கூறுமணியோசைபோலுங் குரலைப்பாருஞ்சனங்காள் இந்த
குளந்தையினிடவடிவுதன்னைக் கூர்ந்துபாருமினங்காள்
என்னகாரணமோவிது யாதோதெரியாதே இப்போ
இந்தவனத்திற்குளந்தைவந்ததுவுங்குதே
மின்னுதையோகுளந்தையிந்த வேனில்பொருக்காமல் மின்னும்
வீரிட்டுவீரிட்டளுகுதே நிட்டுப்பாராமல்
நாமதிர்தவதிசயத்தை நம்பிராஜனிடத்தில் இப்போ
நலமுடனெல்லோருங்கூடிச்சொல்லுவோமிக்ஷணத்தில்
நாமதில்லாதெல்லோருந் தீச்சுமையையெடுங்கள் தங்க
திருவவரும்நம்பிராஜன்றுங்கபேர்வந்திடுங்கள்

குறவர்சொல் விருத்தம்.

நாட்டியப்புகழ்சேர்நம்பி ராஜனேயிருகண்குளிர்ந்த
காட்டிலோரதிசயமான காரணங்கண்டுவந்தோம்.

கேட்டிடவேண்டும்வள்ளிக் கொடியிற்பெண்குழந்தையோ
தேட்டமாய்க்கூவுதையா தெரிந்திடப்பார்க்கவாரும் [ன்று

வசனம்.

அகோவாரும் இராஜாதிராஜனுகிய நம்பிமகாராஜனே சரண
ஞ்சரணம் இப்போ துவனத்திற் கிளங்கெடுக்கப் போனவிடத்தில்
வள்ளிக்கிளங்கெடுத்த பள்ளத்தில் சூரியனைப்போல ஒரு பெண்பி
ள்ளையழுதுக்கொண்டிருக்குது அந்தவதிசயத்தைத் தாங்கள்வந்து
பார்க்கலாம்மகாராஜனே.

பொது - விருத்தம்.

புதுமைகாணவர்கள்காணிற் போய்வந்துசொல்லக்கேட்டு
அதிசயம்பார்ப்போமென்று அன்புடன்நம்பிராஜன்
ரதியெனுமொயிலொய்யார நங்கைமோகினியுங்கூட
மதிநிகர்குழந்தைகூவும் வழிதனைத்தேடிவாரார்

வசனம்.

இந்தப்பிரகாரம்குறவர்கள்சொல்லக்கேட்டு நம்பியமகாராசனும்
நங்கைமோகினியும்வனத்தில்வருகிறவித மெப்படியென்றால்.

இராஜன்-வனம்போகும்-நொண்டிச்சிந்து.

இ-ம்-புன்னுகவராளி-அடதாளம்

நந்தாரீவனந்தேடி நம்பி
ராஜனுந்தான்நங்கைமோகினியாம்
மடந்தையுடன்கூடி வாசன்
மல்லிகைமுல்லைமலர்சூடி
குழந்தையிருக்குமிடந் தன்னைக்
கூறென்றுகுறவர்கூட்டமுடன்
தெளிந்துநலம்பேசி நல்வி
சேஷமதாயிருவிசி
அந்தநலம்பார்த்து வெகு
அக்கறையாகநடக்கையிலே
விந்தைமணிபோலே பிள்ளை
விரிட்டசத்தமும்நேரிட்டதே
வள்ளிக்கொடியிற்பெற்ற பெண்
மதலைக்குரலினைக்காதினுற்றார்
உள்ளமகிழ்ந்துகொண்டார் அங்கே
உற்றகுழந்தையைவந்துகண்டார்

இராஜன்சொல்-விருத்தம்.

வந்தநம்பிராஜேந்திரன் வனத்திலுற்ற
மதலைதனைக்கண்டுமனமகிழ்ச்சிகூர்ந்து
அந்தமலர்க்குழலாளை நங்கையாதே
சந்திலகேயபின்னரதே கடவுட்செய்கை

எந்தவகையோவோர்பெண்குழந்தைதானும்
இசைந்தமணிக்குரல்கூவுதிந்தாயாரு
சந்ததியுநமக்கெனவேகுனிந்தெடுத்துத்
தாங்கினுன்நங்கைகையில்வாங்கினுளே
நங்கைமோகினிசொல்-அகவற்பா இ-ம்-மோகனம்.
மன்னனேகேளாய் மாவனந்தன்னில்
முன்னமேயாமு முமையமதாக
குறித்துமேயோர்பெண் குழந்தையைவேண்டி,
வருத்தமாய்ச்சிவனருள் வடிவேலனையுங்
காவனத்தந்த கன்னிமார்தன்னையும்
தாவியேவருந்தி தாளினைப்பணிந்து
பேருடனேழாண் பிள்ளைகளிருக்க
கூறியதுணைப்பெண் குழந்தைதந்திடுவாய்
என்னநான்புலம்ப வென்மொழிகேட்டு
தன்னிலேநமக்காய்ச் சத்தகன்னியர்கள்
வந்துதானன்று வருமையைத்தீர்த்து
இந்தமாவனத்தி லீஸ்வரன்செயலால்
மான்வயிற்றினிற்பெண் மதலையுண்டாக
பான்மையாய்நீங்கள் பரிவுடன்காண்பீர்
எடுத்ததைவளர்ப்பீ ரெனக்கன்னிமார்கள்
கொடுத்திடும்வரங்கைக் கொண்டதாலிப்பேசு
பேணியேநமக்குப் பிரமகற்பனையால்
வாணிபம்பலித்த வள்ளியின்கொடியில்
காரணமாகக் கண்மணிக்குழந்தையைப்
பூரணமாகவே பொருந்தவேகண்டோம்
ஆனதால்தமக்கு அரனருட்குழந்தை
தானிஜமென்று தழுவியேயெடுத்தார்

பொதுவிருத்தம்,

அங்கம்பூரித்தவனுநந்தங்கொண்டு
அரகராசிவசிவாவென்றன்புகூர்ந்து
மங்களஞ்சேர்வேள்விமலை நம்பிராஜன்
வனத்தினிலிப்படிகுழந்தை வாய்த்ததாலே
எங்களுக்குநிகரொருவ ரில்லையென்று
இலக்குமணிபோலிருக்குங் குழந்தைதன்னைத்
தங்கமென்றேமனங்குளிர்ந்து தனதுமார்பில்
தாங்கினனதிகசெல்வ மோங்கினனே
குழந்தைதனையேந்திமுத்தங் கொடுத்துக்கொஞ்சி
கொங்கையமுதூட்டியெங்கள் குலமும்வாழ்க
தழைத்துவிளங்கியமதலைக் கிளியேமானே

தங்கமே திரவியமே தருவே தேனே
வழங்குகிளைக் குறவர்குலக் கொழுந்தே கோல
மயிலே யென்றழைத்து நம்பிரா னுங்கோ னுஞ்
செழித்த வழிகூடி வெள்ளிமலை சூழ்கின்ற
சிற்றூரில் வந்து நன்றாய்ச் செழிக்கின்றாரே.

வசனம்.

அகோ தெப்படியென்றால் இந்தப்படிக்கு நம்பிராசனும் நங்கை மோகினியும் வனத்திற்போய் வள்ளிக்கொடியி லிருந்த பெண்குழந்தையைக் கண்டு எடுத்து தங்கள் சிற்றூருக்குள் வந்து சேர்ந்து குழந்தையை வளர்க்கிறவிதங்காண்க.

இதுவுமது- விருத்தம்,

பவளமதியிதழ் வதனக் கிளி போற் பேசும்
பந்துமுலை வஞ்சியிடை நங்கை மாதும்
நவமணியின் கிரீட நம்பிராசன்றானும்
நன்மையொடு மனதிலெண்ணி மகிழ்ந்த நாளில்
தவமுயலுந் தானதர்ம்ம நன்றாய்ச் செய்து
சார்ந்த வள்ளிக் கொடியதனிற் சமைந்ததாலே
குவிமுலை யாடனக்கு வள்ளியெனப் பேரிட்டுக்
கூட்டுவார் தொட்டிலிற் றாலாட்டுவாரே,

நங்கைமோகினி-குழந்தைக்கு- தாலாட்டுதல்.

கண்ணிகள்-இ-ம்-நீலாம்புரி.

ஆரிவரோ ஆரிவரோ ஆரிவரோ ஆரிவரோ
மாவீன்றகண்மணியே வஞ்சியே தங்கப்பணியே
தேனே திரவியமே தெள்ளமுதே யோவியமே (ஆரி)
வள்ளிக்கொடி நடுவே வந்துதித்த பெண்வடிவே
விள்ளும் பசுங்கிளியே விளைந்த செந்தேன் மொழியே (ஆரி)
சோதிவைடூரியமே சொற்னக்களஞ்சியமே
மாதேவனக்குயிலே மரகதமே பூமியிலே (ஆரி)
வேழ்விமலைக்கரசே மின்னேயென் பெண்ணரசே
தாழ்விலாப் பாக்கியமே சந்தானசிலாக்கியமே (ஆரி)
வரிசையாயெங்களுக்கு வாய்த்தமணிவிளக்கே
இருநிலம்புகழ்ந்த கண்ணே எனமனதிற்குகந்த பெண்ணே (ஆரி)
காவனத்திலே சிறந்து கற்பனையாயுற்பனமாய்
தாவவுமே வந்த பெண்ணே தானெனக்குகந்த கண்ணே (ஆரி)
கந்தவேள் கிருபையினால் கன்னிமார் தன்னருளால்
வந்தருளு நற்கனியே மகளே நீ கண் வளராய் (ஆரி)

பொது-விருத்தம்.

தாலாட்டி மக்கடனை நாளோர்வண்ணந்
தான்வளர்த்து சந்தணசவ்வாது வாசம்

நீராட்டமைவிழிக்குமையுந்தீட்டி
நேரிழைவெண்சங்குமணிக்கோர்வைபூட்டி
பாராட்டிவிளையாட்டுக்கூர்மைகாட்டி
பழகுமொருவயதில்நடைப்பாகங்காட்டி
சீராட்டிக்காதுகுத்திப்பஞ்சுஞ்சேர்த்து
சேலையிட்டுத்தக்கையிடச்செய்கின்றாரே.

இதுவுமது-விருத்தம்.

தக்கையிட்டுத்தளராவிளக்கெண்ணெயிட்டு
தங்கநிறமிசைந்தவள்ளைத்தண்டுபோல
அக்கணாயாய்க்காதுவளர்த்தன்புகூர்ந்து
அருமையொடுமணிமகரக்குழையும்பூட்டி
மைக்குழலேயெங்கள்வள்ளித்தாயேவேலர்
மலரடியைமறவாதமங்கைப்பெண்ணே
மைக்கிளியேயென்றுசகலருங்கொண்டாடிக்
கண்டிடக்கண்டிடவடிவங்காட்டினளே.

பொது-கண்ணிகள் இ-ம்-மத்தியமாவதி.

ஆதிதாளம்.

வள்ளியெனுஞ்சிறுபிள்ளைசிறந்து நாலாம்
வயதில்வளர்ந்துதிரிந்து
பிள்ளைக்கிளிபோற்பேசுமெள்ளவிருகை வீசும்
பெண்ணின்பருவம்-பொருந்த
சந்திரமுகமுஞ்சிறுதனமுங்குறு நகையுஞ்
சாந்துகளபமணமும்
கந்தமலர்க்குழலுங்கழல்விழியி னழகுங்
கனியுமயிர்க்குணமும்
வஞ்சியிடையுங்கன்னிவாழைத்தொடை யுங்கோல
வர்ணச்சரிகைத்துயிலும்
பஞ்சுபோல்மெல்லடியும்பாதச்செந்தா மரையும்
பாடகந்தண்டைவெயிலும்
அருவையினதுதேகஞ்சூரியப்ரகாசம் போல்
அழகுந்துலங்கமீறி
பருவம்வயதெட்டாகியுருவந்துலங்க மங்கைப்
பருவமிருந்ததேறி
மின்னார்களுடன்கூடவள்ளியும்பாங்கி யரும்
வீதியில்விளையாட
தென்னன்மகளோ-தெய்வகந்நியோயிந் திரையோ
செல்வியென்றுரையாட
இப்புவிதனிலிந்தவடிவழகினைப் போல
எங்கெங்குங்கிடையாதென்பார்

ஒப்பினைவள்ளியின் செப்புமொழியுட் கொண்டு
ஒழுங்கிவணங் குவிரென்பார்
இந்தப்படியெல்லோரும்வந்துபசாரஞ் சொல்ல
யந்திஞழவள்ளிமகிழ்ந்தாள்
தந்தைநம்பிராசனும்நங்கைமோகினிப் பெண்ணுந்
தங்களில்மெத்தப்புகழ்ந்தார்-

இதுவுமது-விருத்தம்.

அருமையுடன்தாய்தகப்பன்புகழ்ந்துவாழ்த்த
அண்ணமார்மநமகிழ்ந்தேயன்பாய்க்கூற
உரிமையாய்ப்பின் னுமங்குள்ளோரும்வாழ்த்த
உத்தமவெல்லோரும்போற்றவுறமேவாரோத்த
இருநிலமும்புகழுமிந்த்ராணியைப்போல்வள்ளி
யிலைசத்தசொற்கிளிபோலுமயிலைப்போலும்
பருவமுறும்பக்குவமாயமைந்தமாது
பாங்கிமாருடன்கூடியிருக்கிறுளே-

இதுவுமது வேறு,

இருக்குநாளையிலேவள்ளிக் கியற்றுணையண்ணமாரும்
பெருகியகுறவரோடு பேசுமோரிடத்திற்கூடி
மருவுலாவியபூஞ்சோலை வனத்தினிற்றினைவிளைக்க
உருக்கமாய்நினைந்தெல்லோருமுவமையாயிருக்கின்றுரே

விருத்தம்-

விளங்கியகுறவரென்னும் வேடர்குன்றவர்கள்கூடி
தளைந்திடலாப்புனந்திற் றகுந்தினைவிளைக்கவேண்டி
கிளங்கொடுதினைமாக்கொண்டு கிருபைசெய்வடிவேலர்க்கு
விளங்கியதிசையைநோக்கி வந்துபூசைகள்செய்தாரே-

இதுவுமது-விருத்தம்.

பூசைகள்செய்துமேவமடிப் புனக்குறவர்களுக்கூடி
வாசமாய்வனத்திற்சென்று வளமைநல்லினத்தைக்கண்டு
வீசிமண்வெட்டிக்கொண்டு வெட்டிமுப்புருதிசெய்து
பேசியேநல்லநாளிற் பெருந்தினைவிளைக்கின்றுரே.

சந்தவிருத்தம்.

பழுதுபார்த்துத் தினைவிளைப்பொட்டியைத்
தழுவிக்கையாலெடுத்துத்தெய்வங்களைத்
தொழுதுநல்லமு தற்றரைப்புஞ்சையிற்
குழுவர்கூடித் தினைவிளைப்பார்களே.

குறவர் தினைவிளைக்கும்-கண்ணிகள்.

இ-ம்-ஆனந்தபைரவி-ரூபகதாளம்.

வளைக்குட் செந்தினைவிதைக்கநந்தனை வாழ்த்தியேதொழுதேத்தி

யே, மனத்துயர்தள்ளிவளமையால்நல்லதினத்தினில் வெள்ளிக்கி
ழமையி, விளைக்கவேவிளையளந்திடப்புட்டிநிறைக்கவேமனங்குளி
ர்ந்திட விடையவன்பதம்போற்றியேவிளைக் கடகந்தலையிலேற்றி
யேல், சுருக்கும்வனத்தில்மிஞ்சியே நூறுகுறுக்கமுடையபுஞ்சை
யேசொர்ன்னம்விளையும் கந்நிமூலையில்நன்னயவிளைதன்னையேக
ரத்தினால்வள்ளிநிலத்திற்றூவி விளைத்தனர்தெய்வவரத்தினால், கந்நி
மார்தங்கிருபையால்முளைத்துன்னியெழுந்து. வளர்ந்ததே

பொது-விருத்தம்.

வனதெய்வகந்நிமார்கள் வரந்தருங்கிருபையாலுந்
தினமழைபொழியக்கண்டு தினமஞ்சள்முளையுங்கொண்டு
இனிமைசேர்பயிர்வளர்ந்து செழித்திடும்வளத்தைப்பார்த்து
மனதிலேயோடும்பன்றி மான்மரைசூழ்ந்ததென்றே.

வசனம்.

இந்தப்பிரகாரம் வேடர்குறவர்கள் தினைவிளைத்து பயிர்களாகிய வுடன் அந்தபயிரையழிக்கும்பொருட்டு பலமிருகம்வருகிற விதம்எப்படியென்றால்

மிருகங்கள்வருகிற-தரு-இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்.

மிருகமநேகம்வந்ததே-தினைப்புனத்தில்
மிருகமநேகம்வந்ததே.
பெரியோர்கள்சூழ்வனத்தில் வரிசைத்தினைப்புனத்தில்
பருவப்பயிரிருந்த சொரூபங்கொண்டுசினந்து. (மிரு)
இடசாரிவலசாரியாகப் பாய்ந்துசீறி
இடிபோல்முழங்கிப் பாரிற்கடிவாய்புலிகள்மீறி (மிரு)
பத்துருசுங்காடிபுலி வாய்மிதப்பெருகி
தத்தித்தத்திக்குதித்து தனிவாலதுமுறுக்கி (மிரு)
வெடிவாலதுமுறுக்கி வெருவாயினம்பெருக்கி
படிமேல்சுற்றிநெருக்கி பயிரைத்தின்றுசெருக்கி (மிரு)

இதுவுமது-விருத்தம்.

மீறியேவனத்திலாளி மிருகங்களனேகஞ்சூழ்ந்து
சீறியேமுழங்கும்போது தெரிந்துவேடுவர்கள்கூடிக்
கூறியவேட்டைகொம்புங் குறித்தமாவில்லம்பேந்தி
பேரிகைமுழங்கவேட்டை பெருக்கமாயாடுவாரே.

குறவர்-வேட்டையாடுகிற-தரு-இ-ம்-அடாணா-அடதாளம்.

வேட்டையாடினரே குறவர்கூடி
வேட்டையானரே
கோட்டில்வளைதடிக ளிட்டியெடுத்துக்கும்பு
கூட்டியெழுந்துவெகு காட்டைவளைந்துசுற்றி (வேட்டை)
மேச்சற்கலைபிடிக்க கூட்சவலையெடுத்துப்
பாச்சல்புலியைவெட்டும் வீச்சரிவாளுந்தொட்டு (வேட்டை)

கொம்புமல்லாரிகள் பம்பைமுழக்கஞ்செய்து
அம்பும்வில்லெடுத்துக்கும்புகும்பாகக்கூடி. (வேட்டை)
காட்டைக்கலைத்துவிட்டு வேட்டைமிருகங்களை
யோட்டியாலேவிழத்தாட்டி வெற்றியாகவே (வேட்டை)
மீறுந்தினைப்பயிரைச் சிதியுளப்பவந்த
பாரமிருகங்களைக் கூறுபடவேகுத்தி (வேட்டை)

விருத்தம்.

வேட்டைகளாடிவந்து வெற்றியாயிருக்குநாளில்
வாட்டமில்லாமலோங்கி வளர்தினைப்பொதியாய்க்கொண்டு
கூட்டியேகதிர்கள்வாங்கிக் குலைதள்ளியன்னங்கோதி
நாட்டமாய்மணிபிடித்து நலமுறவிளைவுண்டாச்சே

இதுவுமது.

மணிபிடிவிளைவுங்கண்டு மகிழ்ந்தண்ணமார்கள்சென்று
இணக்கமாய்நம்பிராஜ னிடத்தினில்வந்துபோற்றி
குணத்தொடுதினைபுனத்திற் குடிகொண்டுகாவலாகப்
பணித்தொடுவள்ளிசென்றாற் பலனெனப்பகர்கின்றாரே

வசனம்.

இந்தப்படி மிருகங்களை வேடர்வேட்டையாடிவந்தபிறகு தினைப்பயிர்களுக்கு பட்சிவாராமல் வள்ளியம்மனை தினைக்காக்கும்படி யேழுபேர் அண்ணமார் தகப்பனாகிய நம்பிராஜனுக்குச்சொல்லுகிறவிதங்காண்க.

அண்ணமார் விருத்தம்.

பூங்குயில்மணிப்புறாவும் புளகிதமயில்களன்னந்
தூங்கூந்தூங்கணத்தால்காகந் தாய்தினைக்கதிர்கள்செய்ய
ஓங்கியேவாவொட்டாம லுரிமையாய்க்காவலாக
மாங்குயிலனையதங்கை வள்ளியையனுப்பநன்றே

(வ-ம்) அகோவாரும் எங்கள்தந்தையாகிய நம்பியமகாராஜனே சரணஞ்சரணம் இப்போது நாம்விளைத்ததினைப்புனத்தில் பட்சிமிருகசாதிகள்வந்து அழிக்காமல் காவலிருக்க எங்கள்தங்கையாகியவள்ளியம்மையை தினைப்புனங்காவல்காக்கச் செய்யவேண்டும்எங்கள்தந்தையே.

இராஜனுக்கும்-நங்கைபுத்திரர்களுக்கும்-தர்க்கம்- தரு

இ-ம் சங்கராபரணம்-அடதாளம்.

இராசன்-நங்கைசொல்-தரு

புனத்தினில்வள்ளியைதினைக்கதிர்காவென்றமைத்தாரே சும்மா
போவென்றுசொல்லவும்பொருந்துமோவென்மனமைந்தரே

புத்திரர்சொல்-தரு.

மனத்தொடுதினைப்புனம்வள்ளிகாக்கிலையென்றால்தந்தையேநா
ம்வருத்தப்பட்டதுஞ்சும்மாவிரத்தமாய்போமேதந்தையே.

இராஜன் நங்கைசொல் - தரு-

கண்மணியாகியபெண்மணிவள்ளித்தாய்மைந்தரே தினைக்
காக்கப்போகச்சொன்னாலேற்குமோவுலகுக்கு மைந்தரே

புத்திரர்சொல் - தரு-

தன்மையாய்தினைக்கதிர்தங்கைகாக்கிலையென்றால் தந்தைதாயே
நாம்- சதிராய்வேதனைப்பட்ட கதிராக்கிளிகொய்யாதோ தந்தை
தாயே

இராஜன்-நங்கைசொல்- தரு.

கைவிட்டுப்பிரியாதகண்மணிவள்ளியை மைந்தரே தினைக்
காவலுக்கவளைநாம்போவென்றசொல்வோமோ மைந்தரே

புத்திரர்சொல்- தரு.

மையிட்டவிழிக்குறவள்ளிக்காக்கிலையென்றால் தந்தைதாயே-உங்க
ள்- மக்களேழுபேருக்கும் துக்கமதானென்ன தந்தைதாயே

இராஜன்-நங்கைவள்ளிக்குச்சொல்-வேறு - தரு.

கைக்கிளியேயெங்கள்கண்மணியேவள்ளித்தாயே தினைக்
காவல்காக்கவுநீ மேவச்சம்மதிப்பாய் தாயே
மைக்குழலேயெந்தன் பொற்கொடியேவள்ளிமானே அண்ணை
மார்களுரைத்திடுங்காரியங்கேளடி தேனே
அண்ணமார்வந்திங்கு சொன்னசொற்றவறுமற்றானே காட்டில்
அருந்தினைப்புனத்திற்குவருந்தாமல்போவள்ளி மானே
எண்ணியேசொன்றேமென் றிருதயம்வையாமல் நீயே
அன்னமேதோழியர்தன்னுடன்போய்வரு வாயே

இராஜனும்-நங்கைசொல்-விருத்தம்.

மாங்குயில்மொழியேதேனே. வள்ளியேமகளேமானே
பாங்கிமார்தன்னைக்கூட்டி பண்புடன்றுணையாய்க் கொண்டு
பூங்குயில்கிளிகொய்யாமற் புகழ்தினைப்புனத்தை நன்றாய்த்
தீங்குவாராமற்காத்து ஜெயமுற்றுவருவாயம்மா

வசனம்.

அகோவாருமம்மா எங்கள்கண்மணியாகிய வள்ளித்தாயே இ
ப்போதே பாங்கிமார்களையுங்கூட்டிக்கொண்டு நமது தினைப்புன
ம்போய், மிருகஜாதிகள் பட்சிகள்தினைக்கதிரைக்கொய்யாமல் கா
வலிருந்து, சமுகுமலைக்கந்தர் கிருபையால் செயம்பெற்றுவருவா
யம்மா வள்ளித்தாயே, (வள்ளியம்மை-வ-ம்) சரணஞ்சரணம் அப்
படியே பழுதில்லாமற்காத்துவருவேன்தந்தைதாயே.

பொது விருத்தம்.

ஞாலமேபுகழநம்பி ராஜனும்மவர்தன்பாரி-
மூலமாகியபெண்ணங்கை மோகினியிவர்தன்றாலே
சோலைசூழ்புனத்திற்காவல் சுகமுடனிருக்கச்சொல்ல
வாலைபோல்வள்ளியம்மன் வளமுடன்வருகின்றாளே

வசனம்.

ஆகோதெப்படியென்றால் நம்பிராஜனும் நங்கைமோகினியுந் தினைப்புனங்காக்கச் சொன்னபடியால் வள்ளியம்மன் பாங்கிமாருடன் தினைப்புனங்காக்கவருகிறவிதங்காண்க.

வள்ளியம்மன் வருகிற-தரு-இ ம்- புந்நாகவராளி

ஆதிதாளம்.

வள்ளிநாயகியும்வந்தாள் தினைப்புனங்காக்க
வள்ளிநாயகியும்வந்தாள்
வெள்ளியங்கிரிவேந்தன் வள்ளல்நம்பிராஜேந்திரன்
பிள்ளையாகியபசுங் கிள்ளையாகியகுற (வள்ளி)
மாதாபிதாவைப்பணிந்து போய்வாரேனென்று
வாங்கிவிபூதியணிந்து
ஆதரவாகத்துணிந்து அண்ணமார்தம்மை
அனுப்பிமனது கனிந்து
பேதாபேதங்கள் ஏதெனுநினையாமல்
தாதியர்கள்தன்னோடுங் காதலுடனேகூடி (வள்ளி)
பாடகச்சிலம்புசிலம்ப காலாழிமின்ன
பாதசரங்கள்புலம்ப
ஆடகப்பணிகளசைய முகந்துலங்க
அதிகாற்குணமிசைய
ஜாடையிலிங்கிதராகம் பாடியநாங்கள்தேடி
பேடைமயிற்பாங்கியரோடுமுறவுகூ (வள்ளி)
காவிற்கனிகளருந்தி சாத்தூவைமாலைக்
காளியைப்போற்றிவருந்தி
சேவற்குகனைப்பணிந்து நினைந்துகாக்குந்
தினைப்புனந்தேடித்துணிந்து
தாவிப்பாங்கியரோடு சாசவண்டுபஞ்சபாடும்
பூவைப்பெண்ணாகவிந்திரன் தேவிக்சதிசபோக (வள்ளி)
சந்தனவனங்கடந்து நந்தவனமுந்
தாண்டியேதள்ளிநடந்து
சிந்தைமகிழ்ந்துபடர்ந்து வருந்தியுநற்
செண்பகவனந்தொடர்ந்து
சந்தமல்லிகைச்செண்டுங் கையிலெடுத்துக்கொண்டு
வந்தவழியுமண்டி வளங்கொள்வனங்கள்கண்டு (வள்ளி)

வஞ்சிவிருத்தம்.

சூரியன்கதிரெனத்துலங்கும்வள்ளிமின்
சாரியதினைப்புனந்தன்னில்வந்திட
கூடியவேடர்கள்கூட்டமாகவே
நீடியபாணுசெய்கின்றார்களே.

வசனம்.

இந்தப்பிரகாரம் வள்ளியம்மன் பாங்கிமாரோடு தினைப்புனங்காக்கவரவும் அங்கேவேடர்களால் பரணைகட்டப்பட்டு வள்ளியம்மன் காவலிருக்கிறவிதமெப்படியென்றால்.

வள்ளியம்மன்-பரண்காக்கும்-கண்ணிகள் - இ-ம்.

ஆனந்தபைரவி - ஆதிதாளம்.

செம்பவளக்கால்நாட்டி நன்றாய்ச்
சிறந்ததங்கவளைபூட்டி
கம்பலைப்பொன்மணிநிரப்பி அதில்
கனம்பொருந்துந்தழைபரம்பி
பருத்தகுமிழாணிதைத்து வள்ளி
பாதம்வைக்கவேணிவைத்து
திருத்துங்கவண்டனைச்சேர்த்து வள்ளி
செங்கைவிற்றனிற்கோர்த்து
ஏணிதனிற்பாதம்வைத்து உன்னி
ஏறவள்ளிமனதுவைத்து
பேணியவள்பரணிருந்தும் வள்ளி
பிறபலமாய்வளம்பொருந்தும்
வரிசையண்ணமார்போக அங்கே
வள்ளியும்பாங்கியுமாக
விரைவுடனேகையிற்கவண்சேர்ந்தாள் வள்ளி
விளைந்ததினைப்புனங்காத்தாள்
திசையைநோக்கிப்பார்த்திடுவாள் வள்ளி
தெய்வங்களைக்கும்பிடுவாள்
அசையாதபரணேறி எங்கள்
அன்னைவள்ளிமனந்தேறி
பாங்கியைப்பிரியாமல் நெஞ்சில்
பலநினைவுங்குறியாமல்
தீங்குவரச்செய்யாமல் கிளி
தினைக்கதிரைகொய்யாமல்
வீசுங்கவண்மாறாமல் அம்மன்
வேற்றுமுகம்பாராமல்
ஆசையாய்ப்பரண்மீது நின்று
காத்தாளேகுறமாது
இருதனங்களசைந்தசைய உன்னடை
எறிந்தாளேகவணிசைய
பருவமுயல்குழல்சரிய வள்ளி
பண்புடனேகவணெறிய
கைவளையல்கலகலென வள்ளி

கவணெறிந்தாளுடல்குலுங்க
மெய்யிலிட்டபணிதுலங்க உண்டை
வீசுகின்றாள்கவணிலங்க
வஞ்சியிடைதுவளநின்றாள் அம்மன்
மணிக்குரலோலமென்றாள்
அஞ்சுகப்பெண்குரல்போடக் கேட்டு
அன்னங்கள்வந்திசைபாட
பூங்குயில்கள்சூழ்ந்துமொய்க்க வன்னப்
பூவைகளுந்திரிகள்மொய்க்க
மாங்குயில்களிசைபாட புள்ளி
மயிலனமுநடமாட
இப்படிவள்ளியும்பெரிய இந்த
ஈரேழுலோகமுமறிய
செப்புச்சிலைமாளுளே அம்மன்
தினைப்புனங்காத்திருந்தாளே.

பொது - விருத்தம்.

வாட்டமில்லாமுல்லைமலரணிந்ததோளின்
வள்ளிதினைப்புனங்காத்துவாழுநாளில்
தேட்டமுடன்கும்பமுனியிடத்திற்சேக
சென்றுவந்துவடகயிலைத்திகிரிச்சார்பில்
கூட்டமலர்காவனத்திற்கீதம்பாடிக்
கொண்டுசிவமாயிருந்தகோளன்யோக
நாட்டமுறுநாரதமாமுனிவன்வந்து
நடிக்கின்றான்சிலசரிதைபடிக்கின்றானே.

வசனம்.

அகோதெப்படியென்றால் இந்தப்பிரகாரம் தினைப்புனத்தில் வள்ளியம்மனும் பாங்கிமாரும் காத்துக்கொண்டிருக்க அவ்விடம் அகத்திரைக்கண்டு அவ்வழியாய் நாரதமகாமுனிவருகிற விதங்காண்க.

நாரதர் - வருகிற தரு - இ-ம் - ஆபி - ரூபகதாளம்.

வேதநின்னய்மாகவிளங்குஞ்சித்தாதியோக
நாதனெனுஞ்சிவயோகநாரதர்வந்து தோன்றினார்
புலித்தோலிடையிற்போத்திபோததெண்ணீறுசாத்தி
வலுத்தமந்திரமேந்திவந்துநாரதர் தோன்றினார்
செபஞ்செய்ருத்ராட்சஞ்சாத்திசிவமந்திரந்தியானித்து
தவஞ்சேர்பூங்காவனத்தில்தவநாரதர் தோன்றினார்
கண்டகுண்டுணிகள்மெள்ளக்கண்டபேருடன்சொல்ல
விண்டுகீதங்கள்பாடிவேதநாரதர் தோன்றினார்

விருத்தம்,

வந்திடுநாரதர்முநிவர்பாலமீதுற்று
வள்ளிமதிவதனமுமெய்வடிவுங்கண்டு
வித்தைமதியோரதியோசீதைதானோ
மேனகையோவூர்வசியோமின்னோவென்னோ
இந்தவுலகினிலிவள்போலழகுங்காணேன்
என்றகளிகூர்ந்துபரமெனதிரேநின்று
சொந்தமென்றேபுனங்காக்கும்பெண்ணைப்பார்த்துச்
சூட்சமதாய்முநிவசனஞ்சொல்லுவானே,

நாரதர்சொல்-தரு-இ-ம்-தோடி- ஆதிதாளம்,

ஆரம்மா நீசொல்லுவாய்-தினைப்புனங்காக்கும்
அதிசயந்தனைவிள்ளுவாய்,
சாரம்பொருந்துந்தமிழ்சாரந்தெரிந்தபசுந்
தங்கமேநின்கிளையெங்கேவுன்தாய்தந்தை (ஆரம்)
ஆதிலட்சுமி தானோ தெய்வலோக
அயிராணியெனு மானோ
சோதியோசரஸ்வதியோரம்பையோவேதத்
துலங்கியபார்ப்பதியோ
ஏதோநின்பேர்தந்தைதாய்பேருஞ்சொல்லுவாய்
இந்தத்தினைப்புனத்தில்வந்தவிதமோ

நாரதர்சொல்- வசனம்,

அகோவாருமம்மாதாயே ஆதிலட்சுமி இந்திராணி-சரஸ்வதி ரம்பைகள் பார்ப்பதி இவர்கள்போல் தினைப்புனங் காத்திருக்கிறாயே யாரோஎனக்குத்தெரியவில்லைஉன் பெயரும்உன்னூர் பெயருமஉன்தாய்தந்தைபெயருந் தெரியச்சொல்லுவாயம்மா தாயே,

வள்ளியம்மன்சொல்-விருத்தம்.

சாதியோநாங்குறவர்குலந்தாய்பேர்நங்கை
தந்தைநம்பிராசேந்திரன்யென்பேர்வள்ளி
கோதில்லாவேள்விமலைக்குடியாஞ்சிற்றூர்
குடியிருப்பாமெங்கள்பதியதுவேவாசம்
நீதியுடன்தினைப்புனத்தைக்காப்பாயென்றே
நேயதந்தைதாயெனையுமனுப்பிவைத்தார்
ஒதுமென்றீர்நீர்தானுமூர்தானேதிங்
குமதுபெயர்தானேதோவுரைசெய்வீரே,

வசனம்.

அகோவாருந் தவமுநிவரே என்னுடைய ஊர்பெயருந் தாய்தந்தைபெயரும் என்பெயருஞ் சொல்லச்சொன்னீரல்லவா எங்கள்ஜாதியோ குறச்சாதி நாங்கள் வாசமாயிருக்கிறது சிற்றூர் என் தந்தை நம்பிராஜன் தாய் நங்கைமோகினி என்பெயர்வள்ளி

ஆனபடியால் நீரெவரோ எனக்குத் தங்கள்பெயர்தெரியச்சொல்
லுமையா

நாரதர்சொல்-விருத்தம்.

சீரிசைக்குயில்கள்கூவுந் தினைப்புனவள்ளிகேளாய்
நாரதனென்பேரிந்த நாடெல்லாமறிவாரிங்கு
காரியஞ்சொல்வேனிப்புஞ் சமூகமாமலையில்வாழுஞ்
சாரதரூபங்கந்த சாமியைமணஞ்செய்வாயே

வசனம்.

ஆகோகேளாயம்மா வள்ளித்தாயே நானே நாரதமகாமுனி என்றால் ஈரேழுபதினாலுலோகமுஞ் சொல்லிக்கொள்ளுவார்கள் ஆனபடியால் நான்சொல்லும் வார்த்தைதனை மனதிற்கொள்ளுவாய் ஆகையாலே நீரூபசவுந்தரியமாகயிருக்கிறபடியால் சமூகாசலக் கந்தசாமியை மணஞ்செய்துக்கொண்டால் எனக்குசந்தோஷமா யிருக்கிறது அம்மாதாயே

நாரதர்சொல்-கண்ணிகள்-இம்புன்னாகவராளி-அடதாளம்

மனதுக்கிசைந்தவர்தானே குகனை
மணஞ்செய்துக்கொள்வள்ளிமானே
கனமும்பொருந்தும்வள்ளித்தாயே எங்கள்
கந்தனைமணந்துக்கொள்நீயே
அழகுமாமலைமுருகேசன் உந்தன்
கருத்திற்குகந்தவிசுவாசன்
தழுவிக்கொண்டால்வெகுசெம்மையே கந்த
சாமிதருவார்வெகுநன்மையே
அசுரர்சமரில்வென்றவேலன் அவ
னண்டரட்சகசிவபாலன்
வலியபனிரெண்டுகைதோளன் உந்தன்
மனதிற்குகந்தமணவாளன்
கலியுகவரந்தகுமாரன் யார்க்கும்
கருணைபுரியுமுபகாரன்
சலியாமலவர்க்குச்சம்மதிப்பாய் வள்ளித்
தாயென்சொல்மனதினிற்பதிப்பாய்
வேற்றுபேதகந்நினையாதே வெற்றி
வேலரைச்சேர்ந்தணைமாதே
ஆரெவரோவென்றெண்ணாதே குகனை
அணைந்துக்கொள்வினைகள்வாராதே
கமலச்சரவணச்சண்முகனை கூடி
கலந்துக்கொள்நலசேவகனை
அமரர்டவிக்குழந்தைக்குகனை சேர்ந்து
அணைந்துக்கொள்குமரதேசிகனை

ஏ

வேலுண்டுவினையில்லைத்தானே குகனை
மேவிக்கொள்குறவள்ளித்தேனே
மேலுங்கதிதருவார்நிஜமே வடி
வேலனுந்தன்கைவசமே
தனித்திருப்பதுஞ்சும்மாவருத்தம் கந்த
சாமிக்குமுனக்கும்மெபொருத்தம்
கனிக்குநிகராஞ்சுப்ரமண்யம் தங்கைக்
கலந்துகொண்டால்கோடிபுண்யம்

பொதுவிருத்தம்.

கபடநாரதனுரைத்தமொழியைக்கேட்டு
காதிலிருகையைவைத்து கருத்துவேறாய்
அசியமாயிவ்வார்த்தை முனிவன்சற்றும்
அஞ்சாமற்சொன்னானே அக்யானத்தைத்
செவிதனிலேகேட்கவுந்தான் விதியோஓகோ
சிவசிவாஹரஹராசிவனேயென்று
குவிமுலைப்பெண்வள்ளிநாயகிவிசாரங்
கொண்டுதன்விதியைநொந்து கூறுவாளே

வசனம்.

இந்தப்படி வள்ளிநாயகியை நாரதர் சுப்ரமணியனைவிவாகஞ்செய்துக்கொள் என்கிறதைக்கேட்டு காதிலிருகையைவைத்துவள்ளியம்மன் புலம்புகிறவிதங்காண்க.

வள்ளியம்மன்-புலம்பல்-கண்ணிகள்.

இ ம்-முகாரி-ஆதிதாளம்.

இந்தஅக்யானவார்த்தை என்செவிகேட்கவுந்தான்
என்னவிதியோபரமசிவனேபரம சிவனே
வந்தமுனிவனென்முன் வம்புபடப்பழியாய்
மதியாமற்சொல்லலாச்சேசிவனேபரம சிவனே
ஆரண்யந்தனிலேநா னருந்தினைக்காக்கவந்து
அவதூறுகேட்கலானேன்சிவனேபரம சிவனே
கோரணியாகமுநி கூறுசவார்த்தைதன்னைக்
கூறவுங்கேட்கலானேன்சிவனேபரம சிவனே

வள்ளியம்மன்சொல் விருத்தம்

திருமாலின்சகோதரிபார்வதிதன்சேயன்
செழித்தாறுதலத்திலுக்குஞ்சேர்ந்தகந்தன்
குருவானகுகனைமணஞ்செய்வாயென்று
குறித்துரைத்தீராதநீதியல்லசும்மா
வெருவாயுமுலர்ந்திட நீர் பேசவேண்டாம்
வீண்பேச்சுதானேயிஞ்சியிங்கு





மறுவார்த்தைசொல்லாதே நில்லாதேபோ
வந்தவழிதிரும்பிவிடுமதியில்லானே.

வசனம்.

அகோவாரும் நாரதமகாமுநிவ்ய ஆறுதலங்களிலும் வீற்றி ருக்கும்படியாகிய சுப்பிரமணியக்கடவுளை மணஞ்செய்யும்படி யாய் சொன்னீரல்லவா அப்படிக்கு நீர்சொல்வது தருமமல்ல வ ந்தவழியே திரும்பிப்போகலாம் நாரதமுநிவரே.

நாரதர்சொல்-விருத்தம்.

பின்னைவருங்காரியமுன் சொன்னேனென்சொற்
பிழையேமுன்சொல்லிபகை யாளியானேன்
உன்னுடையமனதினிலேன் வீண்பொல்லாப்பு
உடையவன்வந்தாலவன்பா டுன்பாடம்மா
என்னையுங்கோபிப்பதுங் காரியமுமல்ல
இசைசந்தமுகங்கண்ணாடி யெதுத்தாலல்லோ
நன்னயமாய்த்தெரியுமிங்கே யதற்குமுன்னே
நான்சொல்லத்தெரிந்திடுமோ நவிலுவாயே.

வசனம்.

கேளுமம்மா வள்ளித்தாயே நான்பின்னால் நடக்குங்காரிய த்தை, உனக்குமுன்னேசொன்னதால் என்பேரில் கோபம்வந்தது ஆனால் கண்ணாடியை முகத்துக்கெதிர்பார்த்தால் தெரியுமல்லவா அதுபோல கழுகாசலக்கந்தநாயகர் உன்னைமணஞ்செய்வாரோ அ தற்கு முன்னே நான்சொல்லத்தெரியுமோ சொல்லுமம்மா வள் ளித்தாயே.

வள்ளியம்மன்சொல்லுகிற- கண்ணிகள்.

இம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

வீண்பேச்சுப்பேசவேண்டாம் நாரதனே இந்த
மிரட்டுநடவாதிங்கே நாரதனே
போம்போம்வந்தவழியே நாரதனே இங்கே
பொருந்தாதவார்த்தைசொன்னாய் நாரதனே
கந்தனுக்கிணங்கென்றதும் வாய்மதமோ சற்றுங்
கனியாமற்சொல்வதுஞ் சம்மதமோ
எந்தனைவேலவருக் கிணங்கவென்றே இங்கே
என்முன்னெதிர்த்துச்சொன்னீர் நீருமின்றே
வெற்றிக்குறக்குல மென்றறியாமல் வம்பு
விள்ளுகிறீர்எங்கள் சேதிதெரியாமல்
சற்றுநீர்நெஞ்சை தொட்டுப்பாராமல் சும்மா
கல்வித்தனம்பேசுகிறீர் சோராமல்
அண்ணமாரிட்சணத்தில் வருவாரே வந்தால்
அம்புவில்லெடுத்துன்மேற் பொருவாரே

விண்ணாட்டுநாரதனே என்றாரோ இவ
வேடங்கொண்டதுசும்மா வீண்தானோ.

வள்ளியம்மன்சொல் விருத்தம்.

சடைமுடித்தவேடமெல்லாந் தாமென்று
தவமுநியென்றேயெவருந் தாஞ்சொலவாரோ
வெடுவெட்டெனப்பேசுவதும் நடவாதிந்த
வீண்பேச்சுநாரதனே மிஞ்சவேண்டாம்
அடம்பிடித்தேயெங்களண்ணர் வருவார்வந்தால்
அண்டவொட்டார்கண்டவுடனெய்யாமலெய்வார்
திடமுடன்முன்னில்லாதே போபோயிந்த
செய்கையறியாதுசும்மா செப்பினீரே.

வசனம்.

அகோவாரும் நாரதமகாமுநியே நீர்சிவனைப்போல சடை வைத்தவீரோ கந்தனுக்கு இணங்கென்று வார்த்தை சொன்னீரல்லவா அது இங்கே நடவாது இப்போது எங்களண்ணமார்கள் வருவார் உம்மைக்கண்டால் அம்பாலெய்வார் அதற்குமுன் போய்விடும் நாரதமகாமுநியே.

நாரதருக்கும்-வள்ளியம்மனுக்கும்-தர்க்கம்-கண்ணிகள்

இ-ம்-கண்டா-அடதாளம்.

கடந்தவார்த்தைசொன்னாற் காரியமோவள்ளித்தாயே எங்கள்
கந்தனைமருவினாற் கனக்குறையுண்டோசொல்வாயே

வள்ளியம்மன் சொல்.

நடந்தவார்த்தைசொன்னாய் தூரம்போய் நாரதமுநியே இந்த
துன்மார்க்கமேதினி யெய்யாதநாரதமுநியே

நாரதர்-சொல்.

இந்தக்கினைப்புனத்தி லிருக்கவிதிபோவள்ளிமானே கந்தர்க்
கிணங்கிக்கொண்டாலுன்னை பெருங்கையப்பார்கள்மானே.

வள்ளியம்மன்-சொல்.

உந்தன்மதமோதிந்த உறமோநீவெகுஜல்லியாச்சே
உலகுக்கொவ்வாதிந்த கலகம்பண்ணுந்தவீண்பேச்சே

நாரதர்-சொல்.

பேச்சுநடந்ததல்லவோ பேதையேயோசனைதோணும் கந்தன்
பெரியவனவனை நீ மருவச்சம்மதித்திடவேணும்

வள்ளியம்மன் சொல்

வாய்ச்சம்பிரதாயமுன் வழக்குஞ்சொல்லாதுகேள்நாரதனே நட
வாதெந்தன்குறக்குலம் வழக்கம்பொல்லாதுகாண்நாரதனே

நாரதர் சொல்.

குச்சுகுடிலுங்கட்டிக் குடியிருப்பதும்நல்லவாழ்வோ எங்கள்
குமரனையணைந்துபொற் கோவிற்குள்ளிருப்பதுந்தாழ்வோ

வள்ளியம்மன்-சொல்.

குச்சங்குடிலுஞ்செம்பொன் கோவிற்போலிருக்குங்குலத்திற்கே
கொஞ்சத்தனயம்பசியிஞ்சி வந்த யிந்தத்தலத்திற்கே (இந்த

நாரதர்-சொல்.

தள்ளுமாடு பொதிசுமந்து திரும்வள்ளித்தாயே கந்தன்
தொடர்ந்துவருவாரிங்கே கடந்தமொழிகள் சொல்லுவாயே

வள்ளியம்மன்-சொல்.

தள்ளிநடந்துகர்த்தசாமிவந்தாலுஞ்செல்லாதே இங்கே
துணிவுசொல்நாரதமுனியே யோடிப்போநில்லாதே

நாரதர்-சொல்.

வடிவேல்குமரனைப்போல் மாப்பிள்ளையினிக்கிடையாதே வள்ளி
மங்கையேகுமரனைமருவமனதுசடையாதே

வள்ளியம்மன்-சொல்

சடைமுடிநாரதாநான்விடேனிதுவனமாப்பு என்முன்
சமாசாரமிதுசொல்லுறாய் சண்டைவருமினிபொல்லாப்பு

நாரதர்-சொல்

கஞ்சிக்குங்காடிக்குங்கைக்கூறிபார்த்திருக்குறத்தி எங்கள்
கந்தனைமருவினாலகமுமுண்டுமாகதர்விருத்தி

வள்ளியம்மன்-சொல்.

மிஞ்சியமருந்துள்ள மேன்மைக்குறவர்குலநாமே மட்டு
மீறிப்பேசியபேலாச்சீறிபாய்ந்துகொல்வோமே

நாரதர்-சொல்.

வார்த்தைகடக்கவழிக் தூர்ந்துபோங்குறமயிலே வள்ளி
மங்கையேகுமரனை மணந்துக்கொண்டாலவெகுஒயிலே

வள்ளியம்மன்-சொல்

எதிர்த்துப்பேசுகிறாயிணைக்காதிக்கவார்த்தைபொட்டுமோ வீண்
ஏட்டாப்பழத்துக்குக் கொட்டாவிவிட்டாலெட்டுமோ

பொது-விருத்தம்.

எந்தெந்தவிதத்திலும் மிகவசனங்கள்சொல்ல
சிந்தையில்பதிக்கிடாமல் சீறியவார்த்தைசொன்ன
சுந்தரவள்ளிமாதுபோற்றலங்குபாதாதிகேசம்
வந்தநாரதனும்பார்த்து மடலினில்வரைந்திட்டானே.

வசனம்.

அகோதெப்படியென்றால் இந்தப்பிரகாரம் வள்ளியம்மனுக்கு வேண்டியபுத்திமதிகளைச்சொல்லியுங்கேளாமலிருக்க அவர்களுடையரூபசவுந்தரியத்தைசித்திரப்படத்திலெழுதிசுப்பிரமணியருக்குக்காண்பிக்கும்பொருட்டாய் நாரதர்கழுகுமலைக்கு வருகிறார்.

சுப்பிரமணியர்வருகிற விருத்தம்.

திருக்கனம்புவிகடத் தங்கிபற்பலவாய்நல்ல

பெருக்கமாப்முநிவர்நாற்கால் பெற்றிமிருகமோடு
கருக்குயில்மயில்கள்மேவுங் கழுகுமாமலையில்வாழுந்
திருக்கையில்வடிவேலேந்துஞ் சிவசுப்பிரமணியர்வந்தார்,

வசனம்.

இந்தப்பிரகாரம் நாரதர் கழுகுமலைக்குவருஞ்சமயத்தில் அவிடம் கழுகுமலையில் சிவசுப்பிரமணியர் கொலுவிற்கு வருகிறவிதங்காண்க.

சுப்பிரமணியர்-வருகிற-தரு ௰௧-ம்-சங்கராபரணம்-ஆதிதாளம்

பல்லவி.

சிவசுப்பிரமணியர்வந்தார்-கழுகாசல
சிவசுப்பிரமணியர்வந்தார்

அநுபல்லவி,

சிவசுப்ரமணியர்வந்தார்-தவமுநிவர்கள்சூழ
சித்ரகலாபமயில் தத்திமிதிமியென
நர்த்தனஞ்செய்திடச் சித்தர்களும்புகழ் (சிவ)

சரணங்கள்.

ஆறுமுகந் துலங்க பன்னிருகையின்
அழகுமிகுந்து இலங்க
கூறுசெய்திடும் வேலும் மணிக்கிரீட
குண்டலம்பணி மேலும்
வேறுபடச்சூரனைமாறுபடச்செய்கோல
வெட்டிகொண்டிடுஞ்சூலஞ் சத்திமணிமந்த்ரவாள்
கைத்தலமதிலெடுத் தைத்தவுணர்கள்படை
கலங்கிடயமதி குலைந்தும்வாடிட
யிலங்களோயிருந் திலங்கவேலவர்
வீரசூரபத்மாவையே களப்
போரிலேஜெயமுந் திரமாகச்செய்து(சிவ)

பொ- வசனம்.

இந்தப்பிரகாரம் கழுகுமலைக் கந்தசாமி தமது கொலுவில்வந்து தேவர்கள்சூழ இருக்கும்போது அந்தசமயத்தில் நாரதர்வந்து சொல்லுகிறவிதங்காண்க.

நாரதர்-வசனம்.

அகிலாண்டகோடி பிரமாண்டநாயகராகியுங் கோடிசூரியப் பிரகாச சச்சிதானந்த ஆதிபராபர வஸ்துவாகிய ஆதிபரமேஸ்வரர் புத்திரசிகாமணியாகிய சுப்பிரமணியக்கடவுளே சரணஞ் சரணமையாசுவாமி.

சுப்பிரமணியர்சொல்- வசனம்-

அகோவாரும்பிள்ளாய் நாரதமகாமுனியே மிகுந்தசந்தோஷமாய் எங்கேயிருந்து வருகிறாய் சொல்லும்பிள்ளாய்.

நாரதர்சொல்-விருத்தம்

விண்ணுலகும்மண்ணுலகும்பார்த்துவந்தேன்
வெகுகோடித்தலங்களெல்லாஞ்சுற்றிவந்தேன்.
கண்ணிசைந்தபெணவனத்தில்வள்ளியைப்போற்
கண்டதில்லைசுப்ரமண்யக்கடவுளானே
எண்ணியந்தப்பெண்ணுடைய சொரூபமெல்லாம்
இணங்கபடசித்திரத்திலெழுதிவந்தேன்
நண்ணியந்தபடமுந்தானிருக்குதிப்போ
நடக்கவேண்டியவகையை நவிலுவீரே

வசனம்

ஆ ஆ சொல்லுகிறேன் கேளுமையா சுவாமி தெய்வலோகத்திலிருந்து பூலோகத்திலவந்து வெகுகோடித் தலங்களெல்லாஞ் சுற்றிப்பார்த்து தங்களுடைய திசையைநோக்கிவரும்போது வேள்விமலைக்கருகே மூன்றுலோகத்திலுங்கிடையாத வள்ளியம்மையென்ற ஒருபெண்ணைக்கண்டேன் அந்தஅம்மனுடைய வடிவையொருபடத்திலெழுதிவந்தேன்சுவாமி.

சுப்பிரமணியர் சொல்-வசனம்.

ஆ ஆயெத்தசந்தோஷம்நல்லது நீபோய்க்கண்டுவந்த அந்தப்பெண்ணுடைய விதத்தை செவ்வையாய், இன்னமொருதரம் நன்றாய்ச்சொல்லுவாரும்பிள்ளாய்நாரதமே.

நாரதர்சொல் கண்ணிகள்-இராகம்-புன்னாகவராளி
ரூபகதாளம்.

சத்திவடிவேல்குமாரசாமியுந்தன் சரணம்
தமியேன்நாரதமுனிவன்தாசனுந்தன் சரணம்
புத்தியடியேன்விண்ணப்பப்புகலுகிறேன் சரணம்
போற்றியுந்தன்செவியிலிதைச்சாற்றுகிறேன் சரணம்
சிவந்தபரமேஸ்வரனைச்சேர்வைசெய்தேன் சுவாமி
தெளிந்தபொதிகாசலத்தைத்தேடிச்சென்றேன் சுவாமி
உகந்தகும்பமுனியைக்கண்டுஉமதுதிசை நோக்கி
ஒண்டிவடதிசைவழிச்சென்றுவரும் போது
வேடர்துலைத்தனங்கள்செய்யும்வேள்விமலைக் கருகே
விரைந்துவரும்போதொருபெண்விளைந்ததினைக் காத்தாள்
தேடித்தினைப்புனத்தருகேசென்றெடுத்துக் கொண்டேன்
திவ்யசந்திரோதயம்போல்தேன்மொழியைக் கண்டேன்
வள்ளியென்னும்பெயரறிந்து மகிழ்ந்தேன் சுவாமி
வடிவேலர்க்காகுமென்றேமதித்துக்கொண்டேன் சுவாமி
புள்ளிமயில்வேலரைநீ புணர்வாயென்றேன் சுவாமி
பூவைவள்ளிசினந்தெனையும்போபோவென்றாள் சுவாமி
சுப்ரமண்யர்க்கிணைக்குமென்று துணிந்துசொன்ன போது

கண்ணுக்கிசைந்தகனியே
பெண்ணேபொன்னொளியே | என்மனதோடு
பேசும்பசுங்கிளியே
தேனேதெள்ளமுதே | நான்றனைத்
தேடுந்திரவியமே
மானேமாங்குயிலே | மரகத
வடிவேசொர்ணமயிலே
கண்கொண்டும்பாராயோ | என்னைக்கொஞ்சி
கட்டியேசேராயோ
வன்கண்ணைப்போடாயோ | என்னைக்கிட்டி
மஞ்சத்திற்கூடாயோ
மனதிற்குறியாயோ | பெண்ணேஉன்மேல்
மயங்குவதறியாயோ
கதியிதழ்தாராயோ | நான்கொண்ட
காதலைத்தீராயோ
திரும்பவும்பார்க்கிலேயோ | நான்சொல்வதுன்
செவியினுங்கேட்கிலேயோ
துரும்பிடைதுலங்காதோ | செங்கைவளைகள்
துலங்கெதிர்குலுங்காதோ
உன்னாசைமறப்பேனோ | மதன்கணைகள்
உருவவும்பொறுப்பேனோ
என்னைவிருப்பேனோ | உனைநினைந்து
எனதுயிர்தரிப்பேனோ

பொது-விருத்தம்,

சைவதேவர்கள்கொண்டாடுஞ் சாமிசித்திரத்தைப்பார்த்து
மெய்யுறும்விசாரங்கொண்டு மெத்தவேவருந்தும்போது
மைவிழிவடிவுங்கோல மயிலெனநடையுங்கொண்ட
தெய்வயானைப்பெண்மாது திறமுடன்கொலுவந்தாளே

வசனம்.

இந்தப்பிரகாரம் சுப்பிரமணியக்கடவுள் சித்திரப்படத்தைப் பார்த்து மயங்கிப்ரலாபித்துக்கொண் டிருக்கும்போது அவ்விடம்தனது மனைவியாகிய தெய்வயானை திருக்கொலுவிற்கு வருகிற விதங்காண்க.

தெய்வயானைவருகிற-தரு-இ-ம்-மோகனம் ஆதிதாளம்.

தெய்வயானையும்வந்தாள் திருக்கொலுமுன்
தெய்வயானையும்வந்தாள்
தூய்யசோதியெனமெய்யவிலாசமிகு
சைவமார்க்குதவுந் துயல்தேவர்பணி (தெய்வ)

வாசமல்லிகைமலர்ச் செண்டு கையிலெடுத்து
மனதிற்கிருபையது கொண்டு கிளியெனவே
ஆசைபயில்மொழிதற் கண்டு சூர்யஉதைய
மானதுபோலவள்மேனிவசீகர
மேன்மைகுலாவுகிர்பாசயதிபூரணை ... ... (தெய்வ)
சித்ரமுகவீணை முழங்க மலர்சொரிந்து
தேவர்கள்வந்துவந்து வணங்க இருபுறமுஞ்
சத்ரசாமரைக ளிலங்க திவ்யவதன
சந்திரனெனவருஞ்சங்கரன்மருமகள்
ஐந்தருவளர்திருஇந்திராணிடமகள் ... ... ... (தெய்வ)
செந்தாமரைப்பாத மிலங்க துவண்டகொடி
சிற்றிடைபட்டாடை துலங்க கநகரத்ன
குந்தளவோலைகட் குலுங்க வளை துலங்க
கோதையாதரசேயெனவளர்திரு
சோதிமாமதியாமெனஎதிர்வருந் (தெய்வ)

தெய்வானைசொல் விருத்தம்.

சங்கரசம்புதவுரபாலர்ஞான
சரவணகுகாதிபவென்சாமிநீரும்
செங்கைதனில்மடலேந்திப்பார்த்துப்பார்த்துத்
தியங்குவதேன்மயங்குவதேன்சிந்தைவேறாய்
அங்கமதுமெலிவானேன் புலம்புவானேன்
ஆர்மீதிலாசைகொண்டகையாமெய்யா
செங்கனிவாயதுமலர்ந்திங்கடியாட்குள்ள
சேதியெல்லாந்தெரிந்திடவேசெப்புவீரே

(வ-ம்) சரணஞ்சரணந் தேவர்சேனாபதியாகிய என்பிராணநாயகரே தாங்கள் ஏதோஒருபடத்தைக் கையிலேந்திப் பார்த்துப் பார்த்துத் தியங்கிமயங்கிப்புலம்பிநிற்பதேனோ எனக்குத்தெரியச்சொல்லும்பிராணநாதரே

தெய்வானைசொல்-கண்ணிகள் - இ-ம்- ஆனந்தபைரவி.

ஆதிதாளம்.

தெய்வமேநீசெவ்விதமோசித்திரமடற்றனைப்பார்த்து
தேட்டமாய்மயங்குவதைதெரியச்சொல்லுஞ்சுவாமி
ஐயனேதேவரேநீரார்மீதிலாசைகொண்டீர்
அந்தரங்கமெந்தனிடமறியச்சொல்லுஞ்சுவாமி
தேசத்திலில்லாததிசயந்தானேநீருமிப்போ
தேகமெலிவாகிமநம்நோகுவதேன்சுவாமி
ஆசைதந்தாருமக்குமடியாளுமிங்கிருக்க
அடுத்தோர்பெண்மேல்விரகந்தொடுத்ததென்னசுவாமி
உறுதிசொல்லியடியாளையுத்தமணஞ்செய்தவர்பின்

ன்றுத்திமேலாசைகொண்டவருத்தமென்னசுவாமி
இருமனதோடுமனதாயிருந்தவர்வஞ்சம்நினைத்தால்
என்னுடையகாலமினியென்னசெய்வேன்சுவாமி

தெய்வானைசொல்-விருத்தம்.

ஏதொருபெண்டனைச்சதமென்றெண்ணினீரோ
என்னிலுமதிகவடிவாமோவந்த
மாதின்முகங்கண்டீரோயாவர்கண்டு
வந்துசொன்னபோதனையோகேழ்விதானே
நீதியுடனெந்தனுக்குநடந்தவார்த்தை
நிட்சயமாயொளியாமற்சொல்லவேண்டும்
மாதவத்தோர்புகழ்ந்தேத்துமயின்மீதேறும்
மன்னவரேநின்நினைவையழுத்துவீரே

வசனம்.

அகோவாரும்பிராணநாயகா தாங்கள் ஏதோ ஒருபெண்ணி ன்பேரில் மையல்கொண்டதைப்போற் காணுகின்றது அவள்என் னிலும் அதிகவழகுள்ளவளோ ஆகிலும் முன்று லென்னைமணஞ் செய்யும்போது மற்றொருபெண்ணை நாடேனென்று சொல்லீரா ல்லவோ அப்படிக்கிருக்க இப்போ ஒருபடத்தைப்பார்த்து தியங்கி மயங்கிநிற்பது தருமமோ என்பிராணநாதா.

பொது-வசனம்-

இந்தப்பிரகாரம் தெய்வயானைதன்நாயகராகிய சுப்பிரமணி யக்கடவுளைக்கேட்டு பதிலுத்தாரஞ்சொல்லாமையைக்கண்டு அவ் விடம்நின்றுக்கொண்டிருக்கும் நாரதரைப்பார்த்துக் கேழ்க்கிற விதமெப்படியென்றால்.

தெய்வானைசொல்-கவி.

விண்ணிருநாதனே அண்ணலாரிடத்தில்
வண்ணமாய்ச்சொன்ன திண்ணநீசொல்வாய்

வசனம்.

ஓ ஓ கலகப்பிரியாகிய நாரதனே எந்நாயகரிடம் என்னகோள் வைத்தாய் அதைச்சொல்லும்பிள்ளாய் நாரதனே.

நாரதர்சொல்-விருத்தம்.

தாயேநான்கண்டசேதிசொல்லக்கேளுந்
தலங்கள்சுற்றிக்கைகலைவழிச்சார்ந்தேனங்கே
ஓபாதவிளைந்ததினைக்காத்தாளோர்பெண்
உகந்தவடன்ரூபமெல்லாமுன்னியுன்னி
வாயாலேசொலலிமுடியாதேயென்று
வஞ்சகமில்லாதபடமெழுதிவந்து
தூயவடிவேலவரைப்பார்த்தோமதல்லால்
சுமணஞ்செய்யென்றுநான்சொல்லிலேனே

வசனம்.

அகோவாருமம்மா தெய்வயானைத்தாயே நான்கைலையங்கிரி போய் இவ்விடம்வருகும்போது வேழ்விமலைக்கருகி லொருபெ ண் தினைப்புனங் காத்திருந்தாள் அவள்ரூபத்தை வாயாற்சொல்லி முடியாதென்று ஒருபடத்திலெழுதிவந்து சுவாமியைப்பார்க்கச் சொன்னதேயல்லது மணஞ்செய்துக்கொள்ளச் சொலலவில்லைய ம்மாதாயே.

தெய்வயானைக்கும்-நாரதருக்கும்-தர்க்கம்
கண்ணிகள்-இ-ம் கண்டா-ஆதிதாளம்

தெய்வயானைசொல்லல்.

சொல்லவில்லையென்றுசொன்னாய்சுத்தபரமாத்மாநின்
தொழிலெல்லாமறியேனோ பாவிநாரதா
மெல்லமெல்லப்பேசிநீயெல்லோர்க்குங்குண்டுணிவைத்த
வித்தைநானறியேனோபாவிநாரதா

நாரதர்-சொல்லல்.

தாயேநீசொன்னவார்த்தைத்தப்பிநடந்ததுண்டோ
சற்றுமென்மேற்குற்றமில்லையம்மணித்தாயே
மாயமுங்கபடமும்முருகன்செய்ததேயல்லால்
மற்றொருவர்கள்செய்வாரோஅம்மணித்தாயே

தெய்வயானை- சொல்லல்.

இத்தனையுஞ்செய்துநீகத்தரிநாட்டினவன்
இல்லையென்பதறியேனோபாவிநாரதா
வித்தாரஞ்செய்துவேலர்சித்திரமடலைப்பார்த்து
விரும்பிமெலியவைத்தாய்பாவிநாரதா

நாரதர்- சொல்லல்.

நிஜவார்த்தைசொன்னாலுமெற்றேரப்பலனைவரும்
நிலையாதபொய்யனென்பாரம்மணித்தாயே
பசப்பிவும்மைவஞ்சித்துமுருகன்செய்ததறிந்தும்
பரமாத்தனென்றுசொன்னாயம்மணித்தாயே,

தெய்வயானை-சொல்லல்,

உறங்கிக்கண்மூடிப்பூனைப்பால்குடித்ததப்போ
லுள்ளவஞ்சகஞ்செய்தாயேபாவிநாரதா
மறந்துவிடுவேனோசித்திரமடல்தந்துவேலனை
மயக்கினதறியேனோபாவிநாரதா

நாரதர்-சொல்லல்.

உசந்தபற்காரஸ்சேதியழுஞாலுஞ்சிரித்தாலென்
றுரைப்பதுநிஜமாச்சேயம்மணித்தாயே
நிஜத்தைநான்சொன்னதுங்கண்டணிசொல்வாரென்றே
நேர்கைஞரொன்னமிபேச்சேதும்மணித்தாயே

பொது-விருத்தம்.

கண்ணிருற்கண்டசேதி கழறினேனென்றுபோற்றி
புண்ணியநாரதனும்நிற்கப் பொருந்தியவேலர்தாமும்
நண்ணியகுறப்பெண்ணை நான்கண்டுவருவேனென்றே
எண்ணியதெய்வயானைக் கிசைந்திடவியற்றிட்டாரே.

வசனம்,

அகோதெப்படியென்றால் நாரதனை தெய்வயானையம்மன் கோபித்துத் தர்க்கஞ்செய்துநிற்கின்ற சமயத்தில் சுப்பிரமணியர் தெய்வயானையைச் சம்மதிக்கும்படியாய்ச்செய்து குறப்பெண்ணைக்கண்டு வரும்படிகேட்க தெய்வயானை அவற்கு விடைகொடுக்கிற விதங்காண்க.

தெய்வயானைசொல்-கொச்சகம்.

மின்னும்வடிவேல்தரித்த வேலவரேநான்மருவும்
மன்னவரேயும்முடைய நம்பாலநீருமங்கே
கன்னல்மொழிவள்ளியெனுங் கானக்குறத்தியிடம்
பொன்னடிகணோவாமற் போய்மீண்டுவாருமையா.

வசனம்.

சரணஞ்சரண மென்பிராணநாதா தாங்கள் எண்ணியகாரியத்தை நான் தடைசெய்தாற் கேட்பீரா நல்லது உங்கள்மனம்போல அந்தக் கானக்குறப்பெண்ணைக்கண்டு அதிசீக்கிரமாக நமது கழுகுமலைக்குவந்து சேருஞ்சுவாமி

சுப்பிரமணியர்-வசனம்.

நல்லது அப்படியே போய்வருகிறேன் நீயொன்றுக்கும் யோசிக்கவேண்டியதில்லை என்பிராணநாயகி அகோவாரும்பிள்ளாய் நாரதமகாமுனியே அந்தவள்ளியென்னும்பெண் இருக்கிற தினைப்புனமும் அந்தத்திசையும் அவ்விடத்திலிருக்கின்ற அதிசயமும் அவளிருக்கு மலையானதுஞ் சொல்லும்பிள்ளாய்.

நாரதர்சொல் விருத்தம்.

ஆனைமலைக்குத்தாலமலைதானுண்டு
அதற்கடுத்தபொதிகைமலையங்கேயுண்டு
மோனதவவிசுவாமித்ரன்வேள்வி
முடித்தமலையுண்டுதேவர்முழக்கமுண்டு
ஜானகிராகவனும்லக்குமணனுமுன்னர்
தாடகையைவென்றதுமத்தலத்திலேதான்
கானமலைகுறக்கொடியாடபுனமுமங்கே
கண்டுசென்றாலடையாளங் காண்கலாமே.

வசனம்.

கேளுமையா கழுகாசலக்கந்தசுவாமியே அந்தவள்ளியம்மன் இருக்கப்பட்டயிடந்திற் சமீபமாய் ஆனைமலைக்குத் தாலமலை

பொதிகைமாமலை விசுவாமித்திரர் வேழ்விசெய்தமலையும் ஸ்ரீராமர்இலட்சுமணர் தாடகையைவென்றயிடமும்தேவர்கள்முநிவர்கள் வாசஞ்செய்யும்படியான இடமும் சூழ்ந்ததினைப்புனத்தில்வள்ளியம்மனிருக்கிறாள்என்னுடனேவந்தால் காண்பிக்கிறேன்சுவாமி.

சுப்பிரமணியர்சொல்-வசனம்.

அகோவாரும் நாரதமகாமுநியே அந்தவள்ளியிருக்கிற இடத்திற்குப் போகவேண்டுமானால் என்னசொரூபமெடுத்துப்போகலாம்பிள்ளாய்.

நாரதர்சொல்-வசனம்.

சரணஞ்சரணமையாசுவாமி ஆறுமுகமும் பனிரெண்டுகையும் மயில்வாகனத்தையும்விட்டு வேடர் உருவங்கொண்டு போகலாஞ்சுவாமி (சுப்பிரமணியர்வசனம்.) அப்படியே நல்லது நடவும்பிள்ளாய்.

சுப்பிரமணியரும்- நாரதரும்- தினைப்புனம்வருகிற
கண்ணிகள்-இ-ம்-சங்கராபரணம்- அடதாளம்.

மையல்கொண்டுவேலவர்குறமானைத்தேடியே ஒரு
மானிடவடிவங்கொண்டுபாதைகூடியே
தெய்வநாரதனைகூடச்சேர்ந்துவாவென்று கந்தன்
சீக்கிரங்குறபெண்ணினைப்பார்க்கலாமென்று
வில்லெடுத்துஅம்புதொட்டுவேடர்போலவே வடி
வேலவன்தலத்தைவிட்டுமிஞ்சியேகவே
செல்லவழிகேட்டுக்கேட்டுதினைநாடியே வேலர்
தேன்மொழிவள்ளியைக்காணத்தேடித்தேடியே
தண்டினைப்புனமும்வள்ளித்தலமுமெதுவோ அவள்
தன்னைக்காண்பதெக்காலமோசமயமென்னறக்கோ
கண்களுக்கெட்டாததினைக்காடுதூரமோ மலர்க்
கந்தவள்ளியைநான்காண்பதெந்தநேரமோ
நாரதாவள்ளியிருக்குமலக்குங்காணுமே அந்த
லக்குந்திசையுமெனக்குநவிலனுமே
தூரவோகிட்டவோவழிசொல்லுமெனக்கே வள்ளித்
தோகைதனைக்காணவைத்தாற்சுகந்தருமெனக்கே
என்றும்வேலர்புனத்திலேகியபோதில் அங்கே
இணங்கும்நாரதனும்பையவியம்புவான்காதில்
மன்றல்வள்ளிதன்னைத்தேடிமநமெலிவானேன் தினை
வனத்தைக்காட்டிவள்ளியையுன்வசத்திற்சேர்ப்பேனே
மநந்துயரவேண்டாம்சுவாமியுன்மனத்தின்படியே குற
வள்ளியுன்வசஞ்சேர்த்துவைப்பேனடியேன்
தினைப்புனமும்வள்ளியையுஞ்சீக்கிரத்திலே கையிற்
சித்திரம்போற்காணவைப்பேனிட்சணத்திலே

இரண்டுநாழிகைக்குள் வள்ளிநாயகிமுன்னே இந்த
நேரமேகொண்டுவிடுவேன்றேயனேசொன்னேன்
கண்டுவள்ளியையுமதுலகைவசத்திலே கூடிக்
கலந்தணைந்துசேர்ந்துக்கொள்ளுங்காணிஞ்த்திலே
சக்கைாசீனியென்றேலைதன்னில்வகைந்து அதைத்
தாவெடுத்துத்தின்னரசந்தருமோவிரைந்து
சொற்குறப்பெண்டன்னைமணஞ்சூட்டச்சொல்லியே நீயுஞ்
சொன்னதல்லாலவள்முகந்தோன்றவில்லையே
நாரதாவாவென்றுவேலர்நாடிநடந்தார் தோகை
நாகமலைக்கப்பால்க்காடுநாடுக்கடந்தார்
தெரியுமுடுக்குஞ்சுற்றிதிடலுமேறியே வேலர்
செண்பகவனத்தில்வந்துசிந்தைதேறியே
வெள்ளிமலைதங்கமலைக்கொடிமுடியுண்டே அதில்
விரைகமழ்சந்தனச்சோலைவேலவருங்கண்டே
கிள்ளையும்பூங்குயிலினமும்திணைபெருக்குமே கூவக்
கிளிமொழிவள்ளிப்பெண்ணதைக்கேட்டிருக்குமே
தோகைவள்ளிக்கவண்ணேசையறவதைக்கண்டார் பட்சி
சூழ்ந்திடுமாலோலவென்றசத்தமுங்கண்டார்
வாகையணிகந்தன்றினப்புனங்காண்கிறார் அங்கே
வள்ளிதன்வடிவங்கண்டுவந்தெதிர்நின்றார்

பொது- வசனம்.

இந்தப்பிரகாரம் சுப்பிரமண்யக்கடவுளும் நாரதமகாமுநிவரும் கழுகாசலத்திலிருந்து திணைப்புனத்தில்வந்து நாரதர்வள்ளியைக் காண்பித்து தம திருப்பிடஞ்சென்றபின் சுப்பிரமணியக்கடவுள் வள்ளியம்மனெதிரே நிற்கும்போது அப்போது வள்ளியம்மன்திணைக்கு பட்சிகள்வராமல் ஆயாலோட்டுகிறவிதங்காண்க

வள்ளியம்மன் - ஆயாலோட்டுகிற-தரு-இ-ம்
புன்னாகவராளி ரூபகதாளம்.

ஆயாலோ-ஆயாலோ-பட்சிகளே- ஆயாலோ-ஆயாலோ.

அன்னங்களேகிள்ளைகளே நல்ல
அழகுசிறைவண்டினமே
கன்னங்கருங்காகங்களே சிற
காடைகவுதாரிகளே (ஆயா)
வெள்ளமேபுள்ளினமே திணை
மேவுகின்றகோகிலமே
மெள்ளவரும்வாத்தினமே சோலை
மேவியசெம்போத்தினமே (ஆயா)
மானினமேஆயாலோ புள்ளி
மரையினமேஆயாலோ

கானகத்துமயிலினமே — சிட்டுக்
கம்புட்களே ஆயாலோ — (ஆயா)
வர்ன்னவர்ன்னபூவைகளே — தாரா
வாத்துகளே ஆயாலோ
சொர்னநிறத்தாக்கணமே — அன்றில்
சோடுகளே ஆயாலோ — (ஆயா)

சுப்பிரமணியர்சொல்- கலித்துறை-

காந்தளின்கைவிரல் சிவப்பெருமேபொற்கவணெறிந்தால்
மாந்தளிர்மேனிசெந்தீயழுமேவெய்யவன்கதிரால்
ஏந்துந்தனயிரண்டசைந்திடுமே யிடைஇற்றிடுமே
போந்தவெவ்வாறுங் களுரெங்கைசொல்லும்பூவையரே.

வசனம்.

ஓகோபெண்ணே உன்கையால் கவணெறிந்தால் சிவப்பேறுமே வெய்யலில் மேனிகுலைந்திடுமே இரண்டுதனமுங் குலுங்குமே இடைநோகுமே நல்லது உங்களூர்பெயரென்ன நீயார்சொல்லும் பெண்ணே.

இதுவுமது- விருத்தம்-

கோதையேகுயிலேமானே கொஞ்சியகிளியேதேனே
காதலாயுன்னைத்தேடிக் காமப்பேய்கொண்டுவந்தேன்
ஓதமாய்வனத்தில்நீயுந் தினைப்புனங்காக்கவென்றே
வேதனும்விதித்திட்டானோ விதிவசமென்சொல்வேனே

வசனம்.

ஆ ஆ குயிலே மயிலே என்னிடத்திற் கொஞ்சும்படியாகிய கிளியே பாவியாகிய பிரமதேவன் உன்னைப்பிறப்பித்து இந்தக்கானலிலே தினைப்புனங்காக்க விதிவைத்தானல்லவா நல்லது உன்மேல் மோகங்கொண்டுவந்த என்னிடத்தில் சற்றேவார்த்தை யாடாயா என்மனோரஞ்சிதமான பெண்ணே.

இதுவுமது- விருத்தம்.

சிரிட்டமுகத்தைநேரேதிரும்பியென்னுசைதிர
எறிட்டுப்பார்த்தோர்வார்த்தையியம்பினுளிளப்பமுண்டோ
வாரிட்டதனப்பெண்ணே செவ்வாய்முத்துச்சிந்துமோநின்
பேரிட்டதின்னதென்று பேசுவாய்பேசுவாயே.

(வ-ம்)கேளாய்பெண்ணே உன்னுடைய அழகுபொருந்திய முகத்தைச்சற்றேஎறிட்டுஎன்னைப்பார்க்காயா இருதனந்தையுடைய பெண்ணே உன்வாயைத்திறந்து பேசாயா பேசினால் உன்வாய் முத்துச்சிந்திப்போகுமோ உன்னுடையபெயரை தெரியச்சொல்வாய்பெண்ணே

சுப்பிரமணியர்சொல்-கண்ணிகள்-இ ய-கோடி.

வலைக்குறப்பெண்ணே — துலங்கிய

மரகதக்கண்ணே
மதுரிதக்கனியே
வரிசைசமைத்துனியே
கனத்திருமானே
கட்டிச்செந்னே
கண்கொண்டுபாராய்
காதலைத்தீராய்
பங்கயத்தேனே
பகழ்வெய்தானே
பாசங்கொண்டேனே
நேசங்கொண்டேனே
சங்கீதக்குயிலே
தனியின்பமயிலே
தாகங்கொண்டேனே
மோகங்கொண்டேனே
ஜெகமகிழ்மாதே
சகநினையாதே
சரசசெந்திருவாய்
தாமுத்தந்தருவாய்
சுகமதரதியே
சோதியாமதியே
சதுர்தசித்தினியே
துவரிதழ்க்கனியே
தினந்தினநினைந்தேன்
தேடியுமலைந்தேன்
செவ்விதழெனக்கு
தெய்வமுண்டலைக்கு
அனந்திலங்கசந்தேன்
புனந்தனக்கிசைந்தேன்
அண்டையிற்சேர்ப்பாய்
சண்டையைத்தீர்ப்பாய்
ஒழுக்கமுமிலையோ
மொழியுஞ்சொல்லாயோ
உன்வசஞ்செய்தால்
முண்டடிமெய்தான்
பழிக்குலக்குறப்போ
பாறையோயிரும்போ

இரசம்பொழி
எனக்கின்ப

மருவற்றச்
என்னையுன்
நான்கொண்ட

மன்மதன்
நின்மனப்
அணைந்திட

மரகதத்
உன்மனது
என்மன

நீயும்வஞ்
நயமுறுஞ்
எனக்கொரு

நிலவொளி
மன்மத
மதுரித

உனைநான்
கொஞ்சியே
நிதந்தர

உனதுநினைப்
என்னையுன்
மதன்செயுஞ்

வாய்திறந்தொரு
என்னையும்
புண்ணிய

உன்மனம்
பசந்திடும்

வா

பச்சிலைநிறத்தாய் — தனத்தையுங்
கச்சினில்மறைத்தாய்
சரிவளக்கையா — விந்திர
சாலமும்மெய்யா — நின்றிருந்
சாதனையுனக்கே — மன்மதன்
வேதனையெனக்கே
வரிசைதப்பாதே — இனிஎன்சொல்
மறந்துசெப்பாதே — உன்னுடன்
வருந்திநிற்பேனே — என்மன
ஆற்றிவைப்பேனே

வள்ளியம்மன்சொல்-விருத்தம்.

எட்டாதபழமிதுவென் றெண்ணிடாமல்
எட்டியெட்டியண்ணாந்து பார்த்துப்பார்த்துக்
கொட்டாவிவிட்டதனால் வருவதுண்டோ
கூறாதவார்த்தைதனைக் கூறவேண்டாம்
ஒட்டாதுநீருரைத்த வார்த்தைசும்மா
ஓடிப்போய்நீர்நின்று முயிர்க்கோமோசம்
கட்டானகுறவரெங்க ளண்ணமார்கள்
கானகத்தில்வருமுன்னே கடந்திடாயே.

வசனம்.

அகோகேளுமையா வேடரே நீர்பேசுகிறதைப் பார்த்தால் எட்டாதபழத்திற்கு முடவன்கொட்டாவிவிட்டு அண்ணாந்துபார்த்து ஆசைப்பட்டதுபோ லிருக்கின்றது ஆனால் உம்முடைய பேச்சிங்கே நடவாது இதோ என்அண்ணமார்கள் வருவார் சாக்கிரதையா யோடிப்போம் வேடரே,

வள்ளியம்மனுக்கும்-வேடனுக்குந்-தர்க்கம்-கண்ணிகள்-

இ-ம்-பந்துவராளி அடதாளம்.

வள்ளியம்மன்- சொல்.

ஆருங்காணு நீரெவ்விடம் — உமக்
காா்சொன்னதோ கபடம்
தாருமாறிங்கே செல்லுமோ — உன்சம்ப்ர
தாயமென்னை வெல்லுமோ

வேடர்சொல்.

சீருதேவள்ளிப் பெண்ணே — உன்
சிநேகமறவேன் கண்ணே
பாராமற் பேசுகிறாய் — சும்மா
பார்வையேநீகையை வீசுகிறாய்

வள்ளியம்மன்-சொல்.

விள்ளாதே தூரநில்லு — நின்
வீட்டினிலே யெல்லாஞ் சொல்லு
வள்ளியென்றறியாயோ — சும்மா
வாதுகள் கூறவரும் நீயோ

வேடர்சொல்.

தள்ளாவிருந்தென்னை — தூரத்
தள்ளவும் போமோ என்னை
கள்ளனாகினுமே — என்மேல்
இரங்கிலையோ மனமே

வள்ளியம்மன்சொல்

ஜவ்விப்பேச்சிங்கே செல்லுமோ உஞ்சம்ப்ர
தாயமென்னை வெல்லுமோ
புல்லவுரைக்கவந்தீர் — அது
போதுமெங்களண்ணர்தான் வருவார்

வேடர்சொல்

சொல்லிற்குறமாதே — சீறிச்
சொல்லவும்போகாதே
நல்லாதரவில்லையோ — வள்ளி
நாயகிநீயுஞ்சொல்லாயோ

பொது-சந்தவிருத்தம்-

பாங்கிமாருடனே சிறந்திடும் பாவைவள்ளிமுன்னே குகன்- *
தாங்கிமேலனவே நயஞ்சொலுஞ் சாயசாம்பிரதாயத்தால்-
ஓங்கியே பாணனாய் நிழலோடே நின்றுருமாறியே...... *
வேங்கைமாமரமாகினார் வடிவேலர் மாயமதாகவே........ *

இதுவுமது-முருகுசந்தவிருத்தம்,

இப்படிமாயவுருத்தொடுவேலரிருக்கையில் வள்ளிமுனே... ... *
ஒப்பொடுவாட்டிடுவிற்கணைவாரியுறத்துடனே விளைவாய். . ... *
செப்பியவெள்ளிமலைக்குறவோர்கள் கடுந்தெழுவோர்திரளாய்- *
கொப்பெனவந்துபுனத்தைவிசாரணைக்கூடியுகந்தனரே.... ... *

வசனம்.

அகோதெப்படியென்றால் சுப்பிரமணியவேடரும் வள்ளியம்மனும் பாங்கிமாருந் தர்க்கஞ்செய்துக்கொண்டிருக்கும்போது அந்தவள்ளியம்மனுடைய அண்ணமார்களுஞ் சிலகுறவர்களுந் தினைப்புனம் விசாரணை செய்ய வந்ததருணங் கண்டு சுப்பிரமணி

யர் சமீபத்தில் வேங்கைமரமாகியிருக்க அண்ணமார்கள் வருகிற விதம் எப்படியென்றால்

அண்ணமார் வேடர்கள்வருகிற-தரு-இ-ம் பரசு.

அடதாளம்.

சிலவேடுவர் கானவர் தோன்றினரே

வலைவேல்கொலைவாள் கணைதோளுறவே
வாய்ந்தகெண்டை-நிஜாருஞ்சுந்தர
சாய்ந்தகொண்டை-வசீகரம்பெற

புலிமான்வருதே பொறுபொறெனவே
பொடித்திடவுடல்-துடித்திடுகணை
யெடுத்திடமிக-திடத்துடன்மலை (சில)

நிழலேதுயர்மாமரமேதெனவே
நினைந்துத்தனிசினந்துத்தினை
கனங்கொண்டுயர்-வனங்கண்டெதிர் (சில)

இதுதானிலைபேமரமேதெனவே
இடித்துப்பற்கடித்துக்கைத்
துடித்துப்பொற்-றடிச்சுற்றியே (சில)

அண்ணமார்-குறவர்களைப்பார்த்துச்சொல்

விருத்தம்.

நேத்தில்லாவேங்கைமர மிந்நிறக்கேது
நினைத்தவுடன்மாமரமும் வருமோசொல்வீர்
கோத்திரத்திற்பெரியநம்பிராஜனோடு
கூடவந்தகுறவருமுன் பார்த்ததுண்டோ
ஆற்றின்மனந்தேற்றிவனஞ்சுற்றிப்பார்க்க
அவசரமாயெல்லோரு மடர்ந்துவாரும்
சிற்றமுடன்வேங்கைமர மிதனைநாமுஞ்
சிந்துசிந்தாய்வெட்டிவொன்றாய் சேர்க்கலாமே

வசனம்,

ஆ ஆ வாரும்வேடர் குறவர்களே நேத்தில்லாத வேங்கைமர மின்றைக்குவந்தவிதமென்ன எங்கள்தந்தைநம்பிராஜனும் நீங்களும்வந்தீர்களே அப்போதுதினைவிளைக்கும்போதும்பாணைபோடும்போதும் பார்த்ததில்லையே ஆ ஆ இதுபுதுமையா யிருக்கிறது இதைவெட்டி ஒன்றாய்க்குவிப்போம் வாருங்குறவர்களே (குறவர் வசனம்) அப்படியேபோய்ப்பார்க்கலாம் அண்ணமார்களே.

அண்ணமார்குறவர்களும்-வேங்கைமரத்தைப்பார்த்துச்சொல்

பொதுகண்ணிகள் இ-ம்-பந்துவராளி-ரூபகதாளம்

வேடர்கோன்நம்பிராஜன்மைந்தருங் குறவரோடு
விளைந்திடுந்தினைப்புனஞ்சுற்றிப்பார்த்தார்
கூடிக்குறவர்பாணுக்கெதிர்சென்றார் வள்ளித்தாயை
கொண்டாடிமரங்கண்டுமெய்மருண்டார்
ஏததிசயம்வேங்கைமரமென்பார் அதிலேஒருவன்
இடித்துப்பல்லைக்கடித்துக்கோபிப்பான்
மோதிவெட்டென்றொருவன்சொல்லுவான் அதிலேஒருவன்
முறித்துத்தகர்த்துநொறுக்குவேனென்பான்
முந்திவெட்டுவேனென்றொருவன்சொல்லுவான் அதிலேஒருவன்
முளைத்தமரத்தின்வளத்தைப்பாரென்பான்
இந்தமரத்தின்நிமிர்த்தஞ்சொல்லுதென்பான் அதிலேஒருவன்
இசைந்தகாதலைப்பார்த்துச்சொல்வேனென்பான்
வேறொருத்தர்கள்செய்ததில்லையென்பான் குலதெய்வநம்ம
வேலர்செய்குறைபோலிருக்குதென்பான்
கூறும்வள்ளியைவேலர்மணஞ்செய்ய வேங்கைமரமாய்க்
குதித்ததென்றிந்நிமிர்த்தஞ்சொல்லுதென்பான்

விருத்தம்

மட்டிலாவடிவும்வேங்கை மரத்தினிமிர்த்தங்கொண்டு ... *
வெட்டவொண்ணுதிங்கினம் விவரித்துக்கேட்போமென்று
சட்டமாய்புகழ்ந்துவள்ளித் தாயினைமகிழ்ந்துவாழ்த்தி ... *
திட்டமாய்வேங்கைவந்த சேதியேதெனக்கேட்டாரே. ... *

வசனம்.

இந்தப்பிரகாரம் அண்ணமார்கள் வள்ளியம்மனைக்கேட்க வள்ளியம்மன்சொல்லுகிற விதமெப்படியென்றால்.

வள்ளியம்மன்சொல்-விருத்தம்.

தண்டமிழ்வல்லிசொந்தன் தமையரேசொல்லக்கேளீர்- ... *
வண்டுறைவனத்தில்வேங்கைமரமதுமுளைத்திருப்ப ... ... *
துண்டென்றுமில்லையென்றுமொன்றுநானறியேனிங்கு ... *
கண்டதுமில்லையிந்தக் காரணமறிகிலேனே ...... ........ *

வசனம்.

அகோ வாருங்கள் எனதுயிர்க்குயிராகிய அண்ணமார்களே யானும்பாங்கிமாரும் பட்சிகள்வாராமல் தினைப்புனங் காத்திருந்தோமேயல்லது இந்தமரமிருக்கிறதென்றும் இல்லையென்றுநா

கேட்கண்டதுமில்லை இதுவதோபுதுமையாகவிருக்கிறது அண்ணமார்களே

அண்ணமார்சொல்-விருத்தம்.

நல்லதுநிழலாம்வேங்கை நற்றணைவள்ளித்தாய்க்கு... ... *
அல்லதுவினைவந்தாலு மயிற்குமரேசருண்டு......... .. *
மெல்லவேமனைக்கேபோகிறோம் மெலிந்திடாதிருப்பாய்சேதி
சொல்லவேண்டியதெல்லாநீ துரிதமாய்ச்சொல்வாயம்மா*

வசனம்,

கேளுமம்மா எங்கள்தங்கையாகிய வள்ளித்தாயே இந்தவேங்கைமரமிருக்கிறது நிழலாயிருக்கிறபடியா விருக்கட்டும் அப்படியாதொருவினைவந்தாலும் நமதுகுலதெய்வமாகிய வேலவரிருக்கிறார் நல்லது இப்போது நாங்கள்மனைக்குப்போகிறோம் நீசொல்லவேண்டிய சேதியெல்லாஞ் சொல்லுமம்மா வள்ளித்தாயே.

வள்ளியம்மன்சொல் கண்ணிகள்-இ-ம்-சங்கராபரணம்.

அடதாளம்,

வேழ்விமலைக்கரசே சிற்றாரின்
வேடுவண்ணமாரே பொருள்
தாழ்வில்லாவாழ்க்கையுள்ள என்னிட
தமையரோநீர்கேளீர்

என்றந்தைதாயாரும் என்னைத்தேடி
எங்கியிருப்பர்களோ என்னை
அப்பாய்க்கேட்டாரோ அவ்விடத்தில்
அல்லவருஞ்சுகம்மா

அன்னைதந்தையிடத்தில் தங்கைசுக
மாயிருக்கிறதென்று நான்
சொன்னபடிபோலே நீங்கள்போய்ச்
சொல்லுவீரண்ணமாரே

சேடியர்பாங்கியுடன் தெய்வபலங்
கொண்டுபுனங்காத்து வள்ளி
வாடாமலிருக்காளென்று தந்தைதாய்க்கு
வண்மையாய்ச்சொல்வீரே

மாடப்புறுவன்னமும் குயிலும்
மயிலுடனேதானும் இப்போ
கூடிப்பிரியாமல் தானிருக்கும்
கோலத்தைச்சொல்வீர்களே

வள்ளியம்மன்சொல்-விருத்தம்.

அங்குள்ளஜெனமுந்தந்தை யன்னையுமென்றொடொத்த
மங்கைமார்திரளுஞ்சூழ்ந்த மனிதருஞ்சுகமோவென்று
இங்கிதத்துடனேவள்ளி யின்பமாய்க்கேட்டாளென்ன
துங்கவில்லுடையீர்நீருஞ் சொல்லுவீர்சொல்லுவீரே.

வசனம்.

அகோவாருங்க ளண்ணமார்களே அங்குள்ள ஜெனமும் தந்தை தாயாருஞ் சுகமோவென்று நான் லட்சந்திரங்கேட்டு வந்தனஞ்செய்தா ளென்றுஞ் சொல்லுவீர் அண்ணமார்களே, (அண்ணமார்வசனம்) அப்படியேபோய்ச் சொல்லுகிறோமம்மா வள்ளித்தாயே,

பொது-விருத்தம்.

ஒன்றியகுறவரோடு முயர்ந்திடுமண்ணமாருஞ்
சென்றுதன்பதிக்கேபோக ஜெயமிதுதருணமென்றே
வென்றிசேர்வேலன்கொண்ட வெங்கையின்சொரூபமாறி
மன்றல்மானிடர்போற்பின்னும் வள்ளிமுன்றோன்றினரே.

வசனம்.

அகோதெப்படிஎன்றால் குறவர்களும் அண்ணமார்களும் தங்கள் பதியாகிய சிற்றூருக்குச் சென்றபின்பு இதுதான்சமயமென்று சுப்பிரமணியர் வெங்கைமரம் உருவமாறி முன்போல்வேடரூபங்கொண்டுவள்ளியம்மன்முன்வந்துசொல்லுகிறவிதங்காண்க.

வேடர்சொல்-கண்ணிகள்-இ-ம்-முகாரி- ஆதிதாளம்.

மறக்கமனங்கூடவில்லை வள்ளிமாதே உந்தன்
மையல்கொண்டுவாடுவேனே நானிப்போதே

உறக்கமும்வருவதில்லை என்னசெய்குவேன் அன்னம்
உண்ணவுமிரங்கவில்லை என்னசெய்குவேன்

குயில்மொழிவள்ளியேநான் கொஞ்சினேனேயென்னைக்
கொஞ்சிமுத்தந்தந்தணைவாய் வஞ்சிமானே

மயில்போலழகுடைய மாதரசே கூடி
மருவியணையவாராய் மின்னரசே

நம்பினபேர்க்குவஞ்சகஞ் செய்யலாகுமோ உன்னை
நாடிவந்தநானுமனம் நையலாகுமோ

வம்புசேருங்கொங்கைநடு முண்டில்தானோ முத்து
மாலையாய்க்கிடக்கவரம் பெற்றிலேனோ

துள்ளுமீன்விழியிலிட்ட மையதாகவே நானுந்
துலக்கமாய்ச்சிறந்ததில்லை மெய்யதாகவே

வள்ளியுன்முகத்திற்பூசு மஞ்சளாகவே இப்போ
வந்தனைந்ததில்லையுன்றன் தஞ்சமாகவே

வள்ளியம்மன்சொல்-விருத்தம்.

வெறும்புளியதனைத்தின்றா வீணாய்நாக்கெரிவதல்லால்
வருங்குறியொன்றுமில்லை வாய்ப்புளித்ததுவேமிச்சம்
பருபுலியதும்பசித்தால் பசும்புல்லைத்தின்னுமோதான்
நெருங்கிநீபேசவேண்டாம் நினைத்ததுமுடியாதண்ணே.

வசனம்.

கேளாயண்ணே வேடரே வெறும்புளியைத்தின்றால் நாவு எரியுமல்லவோ அதினால் வருவதொன்றுமில்லை அப்படிபோல புலிபசித்தால் புல்லைதின்னுமா ஆகையால் நீநினைத்தது முடியாது வீண்வார்த்தைபேசவேண்டாம் அண்ணேவேடரே.

வேடர்சொல் விருத்தம்.

செப்புமலரணையிலுன்னைச் சேர்த்துக்கொள்வேன்
தேன்மொழியேமதனகலைத் திறமாய்ச்செய்வேன்
ஒப்பெனவுன்னுயிருமென் னுயிருமொன்றாய்
உகந்தமலர்வாசமும்போலு வந்தேநன்றாய்
தப்பிதமில்லாதிருப்போ மென்றேயெந்தன்
தகப்பன்மேலாணையிட்டுத் தருவேன்பெண்ணே
எப்படியும்நின்கருணை யிரங்கியிங்கே
இப்போதேநன்முகுர்த்த மிணங்குவாயே.

வசனம்.

ஆ ஆ பெண்ணே உன்னைசப்பிரகூடமஞ்சத்தில் சேர்த்து பூவின் வாசம்போல் மன்மதனுடைய லீலையைச்செய்வேன் ஆனால் என்பேரில் சந்தேகம்வேண்டியதில்லை அப்படி நம்பிக்கைவேண்டுமானால் எனதுதந்தையின்பேரில் பரவசஞ்செய்து தருகிறேன் நம்புவாய் இதுநல்லமுகுர்த்தவேளையானபடியால் இணங்கடி பெண்ணே.

வள்ளியம்மன்சொல்-கண்ணிகள்-இ-ம்-காம்போதி

அடதாளம்.

என்னவார்த்தைபேசுகிறாய் அண்ணாவேடா
இனிநான்சகிக்கமாட்டேன்
பின்னையும்வாய்மொழிகேட்கிறாய் இது
பித்தர்பயித்தியமல்லவோ
காட்டில்வேட்டைகிட்டுமே அல்லாதிந்த
கன்னிவேட்டைகிட்டுமோ
தலையாட்டிப்பேசுகிறாய் இதற்கெல்லாந்நா
னாட்டாளியல்லவண்ணே

கொல்லத்தெருவிலூசி வம்பாய்விலை
கூறுகிருய்பேசி
ஜல்லியும்படியாதே வந்தவழிநீ
தான்போகச்சலியாதே
போதுந்துலுக்கத்தெருவில் சன்ஞசிபிச்சைப்
போடுவாரொங்குமுண்டோ
ஜாதிமார்க்கந்தெரிந்தும் என்முன்னின்று
ஜண்டித்தனம்பேசுகிருய்
வடுவற்றகுறச்சாதி அதிலேநானும்
மார்க்கமொருசொல்நீதி
துடுக்குவார்த்தைபேசுகிருய் இதுதகாது
சும்மாயேனேசுகிருய்

வள்ளியம்மன்சொல்-விருத்தம்.

வேடரோஎன்றுன்னைநீர் வேளெனுமதன்போல்நின்று....... ...*
ஜாடையாய்ப்பேசவந்தீர் தாழ்குலமென்றெண்ணமல்...... ...*
ஆடகத்தழுத்துவச்ர மதனைபித்தளையிற்பதித்துச்............ ...*
சூடுவாருண்டோநீர்தான் சொன்னதுதகாதுதானே......... ...*

வசனம்.

ஓஹோவேடரோ தங்கத்திற்பதிக்கின்ற வச்சிரத்தைப் பித்தளையிற்பதுத்துச்சூடுவாரா அதுபோல நீரோஉயர்ந்தகுலம் நாமோதாழ்ந்தகுலம் இந்தகுறப்பெண்ணைப்பார்த்து ஆசைப்படுவது சரியல்ல ஆனுல் என்குலத்தின்விருத்தாந்தஞ் சொல்லுகிறேன் கேளுமண்ணேவேடரே.

வள்ளியம்மன்சொல்லுகிற-ஆநந்தக்களிப்பு

இன்னமின்னம்விரித்துரைக்கக்கேளும் வேட
அண்ணரேயெங்கள்குலவளப்பமெந்நாளும் (இன்)
காட்டுமான்பிணையதனைப்பிடிப்போம் மாட்டில்
கறந்தபால்மலையிலுள்ளத்தேனமிர்தங்குடிப்போம்
கூட்டிலாச்சிகேட்டுவாய்துடிப்போம் காட்டுத்
துஷ்டமிருகம்வணங்கசொன்னபடிமுடிப்போம் (இன்)
குழலிற்குள்ளேதழைதரித்துக்கொள்வோம் உறவு
கூடாதபெண்களையுங்கூட்டிவைத்துபிரிப்போம்
மழைபொழியவருணனையுச்சரிப்போம் தாழை
மடல்குடிலைச்சுமந்துபலமலையிற்சஞ்சரிப்போம் (இன்)
சங்குமணிபலதுபணிபூட்டோம் குறவர்
தாழ்ந்துபோனவர்தன்னையுங்கூட்டோம்
எங்கள்வித்தையொருவருக்குங்காட்டோம் குலத்துக்
கிசையாதவார்த்தையெவர்சொன்னாலுங்கூட்டோம் (இன்)

வள்ளியம்மன்சொல்-விருத்தம்.

கொம்புத்தேன்கனிரசமுங் குடிப்போம்நாங்கள்
கூடாதபெண்களையும் கூட்டிவைப்போம்
வம்புக்கேசண்டைசெய்யோ மதங்கள்பேசி
வலியவந்தசண்டையையும் விடவுமாட்டோம்
நம்பிச்சேர்ந்தவரையடைக்கலமாய்க்காப்போம்
நல்லசங்குமணிபுனைவோ மிதுவேமார்க்கம்
சொம்புற்றேகேம்பாம விருப்போம்சொன்ன
சொற்றவறுக்குறவர்குலத் தோகைநானே.

வசனம்.

கேளுமையா வேடரே எங்கள்சாதியினிடவழக்கம் காட்டில் மிருகசாதிகளைப்பிடித்துச் சுட்டுதின்கிறது மலையிலுள்ள கனிவர்க்கமும் கொம்புத்தேனுஞ் சாப்பிடுகிறது கூடாதபெண்களைக் கூட்டிவைக்கிறது எங்கள்தொழிலே மற்றொருவருக்குக் காண்பிக்கிறதில்லை நம்பி யடைக்கலமானவரை காட்டிக்கொடுக்கிறதில்லை நாங்கள் தரிக்கிற சங்குமணியல்லாது வேறேமணிதரிக்கிறதில்லை அதிலும் நான்மானமுள்ளவள் ஆனபடியால் நீர்பேசுகிறவார்த்தை சரியல்ல போம்போம் வேடரே,

வேடர்சொல்-விருத்தம்.

அறக்கொடுமைசெய்யாத பழிக்காரிநின்
அதிபாவமுழுச்சமர்த்திங் காகுமோதான்
உறக்கமில்லையேமநதி லெண்ணியெண்ணி
உள்ளமெலாமுருகுதடி திரும்பிப்பார்த்து
திருக்கருணைபுரியமந மிரும்போகல்லோ
தெய்வமில்லையோவெந்தன் திறத்தைப்பாரு
குறக்கொடிநானினைத்தபடி யேதானுன்னைக்
குறித்துமணஞ்செய்துநெஞ்சிற்குடிவைப்பேனே.

வசனம்.

அகோவாராய்என்மநோரஞ்சிதமானவள்ளிப்பெண்ணேநான்உன்னைஎத்தனைதிறம்வருந்தியும்உன்மனமிரங்காதது என்ன இரும்போகல்லோ ஆனால் எனக்குந் தெய்வமில்லையோ நல்லதுநீபேசுகிறது ஒட்டாமல் பேசுகிறாய் இப்போதுன்னைக்கலியாணஞ்செய்யாமல்விடுவனோ ஆகிலுமென்திறத்தைப்பாரும் வள்ளிமானே.

வேடனுக்கும் வள்ளியம்மனுக்கும்
தர்க்கம்-கண்ணிகள்-இ-ம்-சங்கராபரணம்.

அடதாளம்.

வேடர்சொல்லல்,

உன்னைமணஞ்செய்குவேன் உனைவிட்
டொருபுக்கம்பான்போகேன் என்னை

அன்னியனென்று நினைந்துக்கொண்டால்-எனக்
காதரவெங்குமுண்டோ

வள்ளியம்மன்-சொல்லல்.

ஆதரவென்றுசொன்னாய் எனக்கிங்
கடுத்தகிளைநீயோ மித்துரு

பேதகம்பண்ணினால்நான் சகியேன்இனிப்
பேசாமலோடிப்போபோ

வேடர்-சொல்லல்.

ஓடிப்போவென்றுசொன்னாய் எனக்கு
உயிர்நிலையிக்கிருக்க என்னைக்

கூடிக்குலாவிநீகொஞ்சிக்கொண்டால்உன்
குருக்களுக்கேபுண்ணியம்

வள்ளியம்மன்-சொல்லல்-

புண்ணியமுந்தவமும் மடந்தனிற்
போனாற்செய்வார்களே இந்தஆ

ரண்யவனந்தனிற் புண்ணியஞ்செய்யென்றால்
யாரிங்குசெய்யப்போறார்

வேடர்-சொல்லல்-

ஆரிங்கேயென்றுசொன்னால் நீயல்லால்
ஆதரவிங்குமுண்டோ என்னைச்

சேரும்படிக்கிநீ நம்பிக்கொண்டால்உன்
சிநேகமறவேன்பெண்ணே

வள்ளியம்மன்- சொல்லல்.

ஆற்றமாட்டாமலே மதிகெட்
டலைகிறாய்தொண்ணூற்று சும்மா

மீற்றுமற்போவுந்தன் மட்டுக்குத்தக்கதாய்
பேசினாற்கோபம்வரும்

வேடர்-சொல்லல்.

கோபமுள்ளயிடத்தில் அதிகக்
குணமுண்டென்பார்களே மனத்

தாபம்பொறுத்தெந்தன்சஞ்சலந்தீருந்தன்
தன்னாளாயிருப்பேன்

வள்ளியம்மன்-சொல்லல்.

தன்னாளாயிருக்க எனக்குநீ
தாய்தகப்பன்கிளையோ பேச

வொண்ணாதேமெத்தமின்றேஇனி
உன்றெலஞ்நதைப்பார்

வேடர்-சொல்லல்.

நட்டாத்தின்கோரையைப்போல் மயங்கி
நானுந்தயங்கிறேனே சற்றும்
ஒட்டாமற்பேசுகிறாய்நீட்டுரிஎன்மீ
தருக்கமில்லாததென்ன

வள்ளியம்மன்-சொல்லல்.

நற்கனிவேழ்விமலை சிற்றூர்நம்பி
ராஜன்வளர்த்தெடுத்த வர்ண்னப்
பொற்கிளிநானுந்தன் கைக்குளகப்பட்டேன்
போபோநில்லாதே

வேடர்-சொல்லல்.

பஞ்சைபறுதியைப்போல் நானிங்கு
கெஞ்சிநிற்கிறேனே சற்றும்
நெஞ்சிரங்காமலேபஞ்சமாபாதகி
நில்லாதேபோபோவென்றாய்

வள்ளியம்மன்- சொல்லல்.

வாய்மதம்பேசாதே உனக்கு
மரியாதைதக்காது சற்றுந்
தாமதஞ்செய்யாமலோடிப்போநீநட்ட
ஜாதகஞ்செப்பாதே

வேடர்-சொல்லல்.

சாதகமல்லப்பெண்ணே உனைநான்
தழுவிப்புணரவந்தேன் சும்மா
வாதுபண்ணாமலெனைக்கிட்டவாவென்றால்
வாய்முத்துச்சிந்திடுமோ

வள்ளியம்மன்-சொல்லல்.

வாயும்வலியாதோ உனக்கு
மனமும்உருகாதோ நான்
ஓயாமலேசியும்ரோஷமில்லாமலே
உன்மனம்பேசுகிறாய்

வேடர்-சொல்லல்.

தவித்துதயங்கிறேனே கெஞ்சித்
தவித்துமயங்கிறேனே இனி
நீவைத்தவிடுவிளக்குமென்றேநிலை
நிற்கவும்பேர்வைத்துக்கொள்

வள்ளியம்மன்- சொல்லல்.

கோரணிசெய்யாதே இதுவமாக்
கோபம்பொறுத்திருந்தேன் இனி

ஆரொன்றும்பாராமல் பாக்கியனைவிட்டு
அடித்துவிரட்டச்சொல்வேன்

வேடர்-சொல்லல்,

அடித்திடவென்றுசொன்னால் எனக்கு
அவளவுலட்சம்பொன்னே முன்
பிடித்திடும்பிட்டுக்குமண்சுமந்தேயடிப்
பெற்றதுஞ்சொக்கரன்றோ.

வள்ளியம்மன்சொல்-விருத்தம்.

நற்குணத்துடனேநீயு நடந்துபோவல்லவென்றால்
தர்க்கம்பண்ணாதேயெந்தன் தமையன்மார்வருவார்வந்தால்
விற்கரத்துடையவாளால் வெட்டுவார்முகம்பாராமல்
மற்குறியெதிர்நில்லாதே வருங்குறிசொன்னேனண்ணே.

வசனம்.

கேளாய் அண்ணேவேடரே என்னோடு நீதருக்கம்பண்ணுகிறது சரியல்ல எனது அண்ணமார்கள் வருவார் வந்தால் அம்பாலெய்து கொலைசெய்வார்கள் ஆனபடியால் தப்பித்துப்போவாயண்ணே,

பொது-விருத்தம்.

கொடியிடைவள்ளிமிகக் கோபமாய்வேடர்முன்னே
துடியதாய்வார்த்தைசொல்லித் தூரப்போவென்றபோது
கடிமலக்கடப்பந்தாரன் கணவளைசுமந்தசெட்டி
வடிவதாய்வள்ளிமுன்னே வந்தெதிர்தோன்றினாரே,

வசனம்,

இந்தப்பிரகாரம் வள்ளியம்மன் வேடனை தூரப்போய்விடு என்றுசொல்ல சுப்பிரமணியர் வேடனாயிருந்த வுருவமாறி வள்ளி முன்புவளையல்விற்குஞ்செட்டியைப்போலவருகிறவிதங்காண்க,

வளையல்செட்டி-வருகிற-தரு-இ-ம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

வளையல்செட்டியும்வந்தான் - வள்ளிமுன்பாக
வளையல்செட்டியும்வந்தான்

அநுபல்லவி.

கிளைகிளையாய்த்தொங்கும் வளையற்பொதியதனை
கீர்த்தியுடனெடுத்துப்பார்த்துத்தோளினில்விட்டு (வளைய)

சரணங்கள்.

தலையிற்பாகையுமணிந்து நெத்தியில்நாமந்
தான்விளங்கவேதுணிந்து
நிலையாய்க்கப்பினிதனை நேத்தியுடன்போத்தி
நீணிலமாதருக்குநேராய்வளையவிட்ட

நிகரிதென்றபலவளையல்கொண்டுவிலை
ஜெகதலந்தனிலேருகனுமங்குகூறி
நிகழுங்கானகத்திலிருக்கும்வள்ளியிடம்
நேராகவிலைகூறியேயவிடம் (வளையல்)

வளையல்செட்டி-வளையல்விற்கும்-கண்ணிகள்,

இம்-சுருட்டி-ஆதிதாளம்,

வளையல்செட்டி - சொல்லல்,

கனகவளைநீலவளைகொள்வீரோபெண்காள் நல்ல
கரத்தவளைபச்சைவளைகொள்வீரோபெண்காள்
மனதிற்கோத்தரத்நவளைகொள்வீரோபெண்காள் உங்கள்
வரிசையோடுதனங்கொடுத்துக்கொள்வீரோபெண்காள்

வள்ளியம்மன்-சொல்லல்,

கொள்கிறேன்காண்வளையல்செட்டி நில்லுநில்லுங்காண் இப்போ
கோலவளையலிதோ கொள்ளவாறேன்காண்
தென்னூர்தினமாவுந்தாரோன்வளையல் தொடுங்காண் கவலைச்
செட்டியேபாணிறங்கியிதோவந்தேன்காண்

வளையல்செட்டி-சொல்லல்,

மடற்கொடியேகுறமாதேகிட்டவேநீராய் நல்ல
வார்த்தைகளைப்பேசியெந்த னருகினில்வாராய்
கொடியிடையேவள்ளிமாதேகையைநீட்டடி உந்தன்
கும்பமுலைச்சோடெனக்குச் சற்றேகாட்டடி

வள்ளியம்மன்- சொல்லல்,

அடியேபாங்கிமின்னார்களே சேதிகேட்டீரோதான் இந்த
அகந்தையானவளையல் செட்டிமிரட்டிப்பேசுகிறான்
பிடிபடிபாங்கிமார்களேஇவனையேநீங்கள் பொல்லாப்
பித்தனைப்பிடித்தபடித்தள்ளிவிடுங்கள்

வசனம்.

அகோவாருங்களடிபாங்கிமார்களே இந்தவளையல்செட்டிசொன்ன அகந்தையானவார்த்தைகளைப்பார்த்தீர்களா அடாவளையல்செட்டிஎன்னவார்த்தைபேசினாய்நல்லதாகட்டும்அப்பாலேநட

வள்ளியம்மனுக்கும்- வளையல்செட்டிக்கும்,

சம்வாதம்-கண்ணிகள்- செளராஷ்டிரம்,

அடதாளம்,

வள்ளியம்மன்-சொல்,

வாடாவளைசெட்டித்தினைப்புனத்தில்வந்ததேனடா
போடாவதிசுறுக்காகவென்புகழண்ணர்கள்வருவார்

வளையல்செட்டி-சொல்,

வந்தால்வளைதாரோனுந்தன்மணிவாயிதழ்தந்தால்
சந்தருணமீதடிமானக்குறமானே

வள்ளியம்மன்-சொல்

கந்தாருளிருக்கநீதானுசொல்லவேண்டும்
இந்தமுறடேண்டாஎங்களண்ணர்வெகுசூரர்

வளையல்செட்டி-சொல்

சூரர்வத்தாளொளிவேனுந்தன்ஜோடுமூலைத்திணாயில்
மாரன்செயும்வினைதீர்த்திடுமாதேநீயிப்போதே

வள்ளியம்மன்-சொல்

கெறுவத்தோடுவாதுகூறியகவலைச்செட்டிநீதான்
திறனுசொல்லிநீமுடியாதடா தெண்டாளடிபடுவாய்

வளையல்செட்டி-சொல்

அடித்தாலுனையிறுகக்கட்டியணைப்பேனடிமானே
பிடித்தபிடிவிடுவதில்லைட் பேதகம்நினையாதே

வள்ளியம்மன் சொல்,

அடித்துசெட்டியுந்தனிடதுடுக்குசொன்னவாயை
அடக்கும்படிசெய்யவெங்களண்ணமார்கள்வாரார்

வளையல்செட்டி-சொல்.

குறவர்தம்மையழைத்தாலடிகூறுவேண்டிவளையல்
பருவமுள்ளமாதேயிளம்பாவைபகர்ந்தேனே

வள்ளியம்மன்-சொல்.

கூறுதடாசெட்டிமலைக்குகையிலொளித்திருடா
மாறுகவேனன்அண்ணமார்கள்வருவார்கள்

வளையல்செட்டி-சொல்.

சிறைமாமலைக்குகையிலொளித்திடவேசொன்னாய்நீயே
மாதேயிந்தவார்த்தைக்கெல்லாமயங்குவேனோமானே

பொது-விருத்தம்.

மூர்க்கமிகுங்குறவரிங்குவருவாரென்றும்
  முதுகடிமேலடிநெருங்கிவிழுமேஎன்றும்
தீர்க்கமுடன்வளையல்செட்டிதனக்குச்சொல்ல
  சேனையுடனக்கணத்திற்குறவர்வந்தார்
மார்க்கவள்ளியஞ்சிநின்றாளங்கேவேலர்
  வளையல்செட்டிகோலம்விட்டுமாதவம்போல்
ஆர்க்குமெய்யென்றிருந்திடவெண்ணீறுஞ்சாத்தி
  ஆண்டாரைப்போற்குறவர்முன்னடினரே.

இதுவுமது-விருத்தம்,

பஞ்சுபோற்றலைநரைத்துவுடற்சரித்துப்
  பதறியேநடுநடுங்கிக்கிழவன்போல
மிஞ்சிவெகுதலங்களெல்லாஞ்சுற்றிவந்த
  மிகுந்தபோதனெனவும்வேடங்கொண்டு

மஞ்சள்வெயிற்றுங்காதுகுடைபிடித்து
மாத்திரைக்கோலேந்திவரும்வழிதன்னாடி.
தஞ்சமென்றேகுறவர்முன்னுண்டானாயா
தண்டூன்றிக்கொண்டாடித்தான்வந்தாரே.

வசனம்,

அகோதெப்படியென்றால் இந்தப்பிரகாரம் வள்ளியம்மனிடத்தில் வளையல்செட்டி வாதாடிக்கொண்டிருக்குஞ்சமயத்தில் அவிடம் தினைப்புனத்திற்கு குறவராகிய அண்ணமார் வருவதைக்கண்டு வள்ளியம்மன் பயந்துநிற்க அப்போது வளையல்செட்டியாயிருந்த சுப்பிரமணியர் குறவர் முன்பு ஒருபெரிய பண்டாரக்கிழவனைப்போ லுருவங்கொண்டுவருகிற விதங்காண்க.

பண்டாரக்கிழவன்வருகிற-தரு-இ-ம்.

மோகனம்-ஆதிதாளம்.

வேலர்பாசாங்குகொண்டு-வந்தார்-கிழவனைப்போல்
வேலர்பாசாங்குகொண்டுவந்தார்.
காலமறிந்துயிந்தாஜாலம்புரிந்திடும்வி
சாலம்பெரும்பண்டாரக்கோலங்கொண்டுதன்னாடி. (வேல)
முத்திதேகம்பழுத்துத்தண்டு கொண்டூன்றிப்பெரு
மூச்சுவிட்டிடவாய்மருண்டு விழுந்துகால்கள்
தெத்தித்தத்திமெள்ளக்கிடந்து நாறுவயது
சென்றகிழவன்போல்நடந்துபண்டாரம்போலே(வேல)
காதில்குண்டலங்களும்பூட்டி கிழிந்துமெத்தக்
கந்தலானபொருகாவிவேட்டி புனைந்துவேடர்
பேதைமயங்கும்புத்திகாட்டி குளறிமொழிப்
பேசிக்குறவர்கள்முன்காசிப்பண்டாரம்போல(வேல)
கன்னத்தோடுகன்னங்களொட்டி பற்களெல்லாம்போய்க்
கடைவாய்வழியேஎச்சில்கொட்டி உன்னியுன்னியே
குன்னிருமற்போருமல்முட்டி சிலேற்பங்கண்ட
கூனிக்கிழவன்போலக்கானக்குறவரிடம் (வேல)
காசிக்குவடக்கேறான் சென்றேன் அலைந்தலைந்து
காலின்மூனையற்றிவரண்டேன் அப்பரோநீங்கள்
பேசிக்கொண்டிருந்ததுங்கண்டேன் என்றனைக்காத்து
பெருகும்புண்ணியஞ்செய்தால் முருகனுண்டென்றுசொல்லி

விருத்தம்.

வேடுருவாய்குமாரகுருகிழவனைப்போல்
சம்பூன்றிப்பாசாங்குகாட்டிநின்று
தவமிகுந்தவேழ்விமலைநற்பிமைந்தர்
தன்கையில்விபூதிகொடுத்தாரப்போது

சிவசிவவென்றணிந்துகொண்டு அய்யாவெம்மைத்
தேடிவந்தகாரியமேதென்றாரங்கே
பவமகல்கன்னியாகுமரித்தீர்த்தமாடிப்
பலம்பெறவந்தோமெனவும்பகர்ந்திட்டாரே.

வசனம்;

இந்தப்படி சுப்பிரமணியக்கடவுள் கிழவனைப்போல் வடிவங்கொண்டு கையில்தடியூன்றி குறவர்முன்புவந்து அவர்களுக்கு விபூதிகொடுக்க அவர்நெற்றியிலணிந்துகொண்டு சுவாமி நீர்மெத்த பெரியவராயிருக்கிறீரே எங்களைத் தேடிவந்த காரணமென்ன, பண்டாரக்கிழவன் நான் கன்னியாகுமரி தீர்த்தமாடிப் பலம்பெறலாமென்றுவந்தேன் என்றுசொன்னார் அதன்பின் கிழவனைக் குறவர்கள் கேழ்க்கிறவித மெப்படியென்றால்.

குறவர்சொல்-வசனம்.

சரணஞ்சரணம் அகோவாருஞ்சுவாமி பெரியவரே நீரெந்தெந்தத்தலங்கள் போய்வந்தீர் அதை யெங்களுக்குத் தெரியச் சொல்லுமையாசுவாமி பெரியவரே.

கிழவன்சொல்- விருத்தம்.

கண்டிகதிர்காமம்வடகாசியாரூர்
கதியருணைத்தலத்திருவேரகமுமற்ற
எண்டிசையிலுள்ளதலமெல்லாஞ்சுற்றி
இசைந்துவந்தோமிவடமதிலதிகசேர்வை
உண்டுகந்நியாகுமரித்தீர்த்தந்தோய்ந்தால்
உடற்றேறுங்கலிதீருஞ்சென்றுகண்டு
கொண்டுவந்தால்நல்லதென்றுமெள்ளவேகிக்
கொள்ளையுடன்வந்தேனிதைக்குறித்திடீரே.

வசனம்.

கேளுமப்பா குறவர்களே நான்கண்டி கதிர்காமம் காசிமுதல் பலதலங்களுஞ் சுற்றிவந்தேன் இவிடம் கன்னியாகுமரி இருக்கிறதாய்ச் சொன்னார்கள் ஆகையால் இங்கே கந்நியாகுமரிக்கு வந்தயிடத்தில் உங்களைக்கண்டேனப்பா குறவர்களே.

குறவர்-அண்ணமார்கள்சொல்-விருத்தம்.

நாங்கள்செய்பாக்கியந்தானோ நாதவேதாந்தனேநீர்
கோங்குசூழ்புனத்திலெங்கள் குலதெய்வம்போலேவந்தீர்
பாங்குறுங்கசடிசிங்கம் பாலதைமீதும்மையொன்றுந்
தீங்குசெய்யாமலிங்கு சேர்ந்ததுநன்மைதானே.

வசனம்.

அகோவாருமையாசுவாமி நாங்கள்செய்தபாக்கியமோ எங்கள்வனத்திற்கு குலதெய்வம்போலேவந்தீர் ஆனால் இந்தவனத்தில்

காடு புலிகளும்மை வழியில் பட்சிக்காமல் விட்டது மெத்த நன்மையாச்சுது உம்மைக்கண்டது நாங்கள்செய்த புண்ணியவசந்தானையா பெரியவரே.

குறவர்சொல்-கண்ணிகள் இ-ம் ஆகிரி-அடதாளம்.

ஐயாவேபண்டாரசுவாமி ஆண்டாரோசந்யாசி மாரோ
செய்தவமூர்த்தாரோவெங்கள்தெய்வம்போலும்வந்தீ ரையா
வெகுதூரம்போயலைந்துவேர்த்திளைத்துவந்தீ ரையா
ஜெகமீதிலும்மைப்போற்பாதேசியெங்குகாணோ மையா
நாங்கள்செய்தபுண்ணியந்தானோநாடியேவந்தீ ராண்டாரோ
தீங்கில்லாதெங்களைக்காக்குந்தெய்வம்போலும்வந்தீ ரையா
கந்நியாகுமரியாடகாடுநாடலைகு வீரோ
உன்னியிரும்புப்போதுந்தன்-உயிர்போவதாகுதே சுவாமி
தன்னந்தனியேவனத்தில் சார்ந்துவந்தீரெங்க ளிடம்
சாவுகிறகாலமெங்கே-தானலையப்போவ தையா
கானகத்தில்நாங்களும்மைக்-காக்கவுந்திற மில்லையோ
தேவரீங்குவந்தபோதே-செய்திடும்பாவங்கள் போச்சு
வேழ்விமலைவேடர்நாங்கள்-வேலவர்க்கடிமை யாகுந்
தாழ்வில்லைமரியாதைக்குறச்சாதிக்குநாங்களதி காரி
ஆண்டவரேநீரிங்கேவாரும்-அடிமைநாங்கள்சொல்லக் கேளும்
தூண்டாவிளக்கெரிந்தாப்போற் சொல்லுகிறோம்போற்றிகேளு
ம்,வள்ளியென்றோர்தங்கையுண்டுகுறவஞ்சிமனதன்பு முண்டு
மெள்ளமெள்ளவாருந்தினைவிளைவுதனைப்பாரு மையா

வசனம்.

ஆண்டவாருமையா பண்டாரசுவாமி நீர்இப்போது சாவுகிற காலத்தில் கந்நியாகுமரிக்கு எங்கேபோய் அலையப்போகிறீர் வேண்டாம் எங்கள் தங்கை வள்ளிநாயகி தினைப்புனங்காத்துக்கொண்டிருக்கிறாள் அவளுக்குநீர் தெய்வம்போலக் கூடத்துணையாயிருந்தால் நீர்கேட்டதெல்லாந்தருவாள் இப்போது அங்கேபோவோம் தினைப்புனத்துக்கு வாருஞ்சுவாமி-

பண்டாரக்கிழவன்சொல்-விருத்தம்.

வள்ளியெனும்பெண்ணொருத்தியங்கேயுண்டோ
வளர்ந்ததினைப்புனமென்றோர்வனமுமுண்டோ
கள்ளமொழியோநிஜமோசொன்னீரிந்தக்
கானகத்திற்றுவளத்தைக்காட்டியென்னை
மெள்ளமெள்ளநடத்திவிளையாட்டுக்காட்டிவ்
வேளையிலந்தச்சீமாட்டிமுன்னேவிட்டு
தள்ளிநில்லென்றிகழாமற்காக்கச்சொன்னால்
தருமமுண்டுகுறவர்குலத்தலைவமாரே.

வசனம்.

ஓகோ குறவர்கள் தலைவனாரே அங்கே வள்ளியென்ற பெண் ணொருத்தி யிருக்கிறளோ தினைப்புனமும்முண்டோ நிஜமாயிருந் தால் அந்தவள்ளியினிடத்தி லென்னைக்கூட்டிச்சென்றுவிட்டு நான் கேட்டதெல்லாம் தரும்படிசெய்தால் அவள்கூடநானுங்காவலிரு ப்பேன் வேடர்களே.

குறவர்கள்-வசனம்.

அப்படியே நல்லபாக்கியம் வாருமையாகிழவனாரே.

அண்ணமார் வள்ளியம்மனுக்குச்சொல்-விருத்தம்.

கூவுமயிலேகுயிலே வள்ளித்தாயே
கோகிலமேயோர்வசநங் கூறக்கேளாய்
ஆவேசம்போல்நடுநடுங்கி யுடற்றள்ளாடி
யாண்டார்பண்டாரநம்மை யடுத்துவந்தார்
பாவம்வரும்கிழவனைநீ நிந்தியாதே
பரண்மீதுவைத்தவர்தான் கேட்டதெல்லாம்
ஓவியமேதாழ்வுவராமற்கண்பார்த்திங்
குதவுவையேஎங்கள்தங்கைவள்ளிமானே.

வசனம்,

கேளுமம்மா எங்கள்தங்கையாகியவள்ளித்தாயே நாங்களொ ருவார்த்தைசொல்லுகிறோம் இந்தப்பெரியவர் மகாவுத்தமர் இவ ரைநீகூடப்பரண்மீது காவல்வைத்துக்கொள்ளு இவரை நிந்திக்கா தே இவர்மெத்ததள்ளாதவர் செவ்வையாய் பார்த்துக்கொள்ளுமம் மா தாயே (வள்ளியம்மன்-வசனம்) அப்படியேநல்லபாக்கியம் எனதுஅண்ணமார்களே.

பொதுகண்ணிகள்-இ-ம்-சௌராஷ்டிரம்.

ரூபகதாளம்.

ஆண்டாரைப்பணிந்துபசியாற்றிவைத்து
காத்திடுநீயென்றார் நல்ல
அறிவுடையநம்பிமைந்தர்குறவர்களுந்
திறமுடனேசென்றார்
தூண்டாதமணிவிளக்கின்சுடரொளியாள்
வள்ளியுஞ்சம்மதித்தாள் அங்கே
தொண்ணூறவயதுசென்றகிழவன்முன்னே
பரணைவிட்டுக்குதித்தாள்
ஒப்பாருமில்லையிந்தகிழவனுக்கேனென்
றெதிர்ப்போய்க்கண்டாள் நல்ல
ஒருமையுள்ளபெரியவரென்றுகந்துவள்ளி
மநதிலன்புகொண்டாள்
தப்பாமற்றமையர்சொல்லைத்தள்ளாமற்

புகழ்ந்துவள்ளியின்றுள் ஆண்டார்
தன்னைவாரும்பரண்மீதிலுன்னியேறு
மென்றுவள்ளிசொன்றுள்

வள்ளியம்மனுக்கும்-கிழவனுக்கும்-ஏசல்-கண்ணிகள்
இ-ம்-சௌராஷ்டிரம்-ரூபகதாளம்.

வள்ளியம்மன்-சொல்லல்,

வருத்துறத்துப்பழுத்ததொந்திப்பண்டாரம்
பெரியகிழவனுமே
பலவிட்டிலன்னமென்றுப்பசியறிந்து நீரும்
போஜனஞ்செய்வீரோ
விருத்தரேநீரிளைத்திரோவெகுநேரம்
பசிபொறுத்திரையா
வெற்றிமலரடிபணிந்தேன்சற்றேபொறும்
பசிதீர்ப்பேன்மெய்யா

பண்டாரக்கிழவன்-சொல்;

ஆட்சியன்னபூரணியேஆதிலட்சுமியே
அமராபதியேவள்ளி
அன்னமேயென்வயற்றுப்பசியுன்னைகெஞ்ச
விட்டுதெந்தன்விதியே
காட்சியில்லகுகனருளாற்றழைத்திருப்பா
யென்பசியைத்தீர்ப்பாய் இந்தத்
திருணமுள்ளவேளையிலேஅருமையாயென்
னுடல்தேற்றிக்காப்பாய்

வள்ளியம்மன்சொல்.

நல்லதையாபண்டாரமேநானுமக்குப்
பசிதீர்ப்பேனென்றேன் தினை
நற்கதிர்கொய்தேயிதித்துஅக்கரையாய்
நான்தருவேனின்றே
வல்லிமுத்துபோற்கலந்தமணிபிடித்துத்
தினைக்கதிரைக்கொய்வேன் காலின்
மடக்கியிதித்தேபொதியையவாரிக்குத்தி
உமிபோகச்செய்வேன்

பொது-மேற்படி-கண்ணிகள்.

தங்கவளைகுலுங்கமெள்ளத்தான்சிரித்து
மாவிடித்தாள்வள்ளி இரு
கொங்கைகள்குலுங்கவிடைதுவளவோங்கி
செந்தினைமாவுந்தெள்ளி
பொங்குரசத்தேனைவிட்டுபுனிதமுடன்
பிசைந்துண்டைசெய்தாள் வாங்கிப்

பொசியுமையாவென்றுவள்ளிபசிபொருந்தும்
கிழவனுக்கேகொடுத்தாள்

இதுவுமது-விருத்தம்,

தின்னுமிருந்தேக்கிலையுங் கொண்டுவந்து
தினைமாவைவைத்துவள்ளித்தேவிதானும்
உண்ணுமென்றாள்பண்டாரக்கிழவன்வாங்கி
ஒருவருண்டைமாப்புசித்தவுடனேஎந்தன்
கண்விழிகள்பிதுங்குதுவாய்க்கசக்குதென்ன
கபடமோவல்லதுவென் காலந்தானோ
தண்ணீர்கேட்குதுவயறுகலக்குதென்றே
தயங்கிவள்ளிமுன்னுளறிமயங்கினரே.

வசனம்.

இந்தப்பிரகாரம் வள்ளியம்மன் பரண்விட்டுக்கீழிறங்கி பண்டாரத்தைக்கூப்பிட அவர்பசிக்குதென்ன நல்லதுபசியைத்தணிக்கிறேனென்று வள்ளியம்மன் தினைக்கதிர்கொய்து குத்தி மாவாக்கிதேன்விட்டுப்பிசைந்து உருண்டைசெய்துதேக்கிலையில்வைத்துக்கொடுக்க பண்டாரஞ்சாப்பிட்டவுடன் தொண்டை நெருக்குது வாய்கசக்குதென்று தியங்கிமயங்கி தாகத்திற்குத் தண்ணீர்கேட்கிறவிதங்காண்க.

பண்டாரக்கிழவன்சொல்-கண்ணிகள்-இ-ம்-காம்போதி-
அடதாளம்

தண்ணீரில்லாமற்றவித்துப்பறக்குதென்னுவி உன்மேற்
சத்தியமாய்நாவைச்சுற்றி வறட்டுதேபாவி

உண்ணுவறண்டுவுழன்றுநெடுமூச்செறியுதே உடல்
ஓட்டிப்பல்லோடுபற்கிட்டியென்னுவிகுறையுதே

பித்துக்கொண்டாற்போற்கிறுகிறுத்துத்தலைசுற்றுதே புத்தி
பேதகமாய்ச்செவியடைத்துத் தொண்டைநீர்வற்றுதே

முத்தித்தண்ணீர்த்தாகமெத்தவெடுக்குதேபாதகி என்னை
மோசஞ்செய்யக்கூடிப் பேசினதோறதிடசாதகி

மாப்பலகாரமென்றென்னத்தையோகொடுத்தாயே மூழு
வஞ்சகஞ்செய்தெனை மிஞ்சிக்குடிகெடுத்தாயே

வேப்பிலைபோலக்கசக்குமோதேன்றினைமாவும் வெறி
மீறுமோதொண்டைக்குள்காறிச்சுழலுமோநாவும்

ஆதிவிதித்தவளைப்பு மிவ்வளவுதானோ ஓடி
அஞ்சியொளித்தாலுங்காலன் சும்மாவிடுவானோ

ஜாதிஜனமென்றுவிவ்வேளை யென்னுயிரைப்பேணுமே நானுந்
தன்னுலேகிடந்துசாகிறேனேஎந்தன்கன்மமே

பண்டாரக்கிழவன்சொல்-விருத்தம்,

தடுத்துரைசொல்லாதவர்கள் குறவரோடுன்
தமையமாரெல்லோரு மெனைத்தான்கூட்டி
அடைக்கலமென் றுன்னிடத்தில் விட்டதற்கே
அவகேடாய்மாவெனவே நஞ்சைத்தந்தாய்
திடுக்கெனநான்சபாவம்போல் வாங்கியுண்டேன்
செவியடைத்துக்கண்ணிருட்டி இருமல்விக்கல்
எடுக்குதடிபாவிதண்ணீ ரெனக்குத்தாராய்
இன்னமுநீயிரங்கிலையோ வென்செய்வேனே,

வசனம்.

கேளாய்வள்ளிப்பெண்ணே உன்தமையன்மார் குறவர்களும் எனக்கு இந்தவசனஞ்சொல்லி உன்னிடத்தில்விட்டது யோசித்தால் நீயும் அவர்களும்என்னமோபேசிக்கொண்டு எனக்குத்தேன்தினைமாவென்று விஷத்தைக்கொடுத்ததாய்காணுகின்றது அதை நான்மெய்யென்றுவாங்கிசாப்பிட்டதின்பிறகு செவியடைக்குது கண்ணிருட்டுகிறது இருமல்விக்கல்எடுக்கிறது ஆனதால் இப்போதாவது மனமிரங்கிதண்ணீர்எனக்குத்தாராய்பெண்ணேவள்ளி,

வள்ளியம்மன்சொல்-விருத்தம்.

நன்மையேநாம்செய்தாலு நடனஞ்சேர்கலியுகத்தில்
தன்மைபோல்விளைந்ததென்றுந் நீருவளமிருக்குதையா
உன்விதியல்லவெந்த னூழ்வினைவிதிதான்நீரும்
என்முன்னேவந்தபோதே எனைச்சனிதுடர்ந்ததன்றே,

வசனம்.

வாருமையாசுவாமி பெரியவரே யித்தக்கலியுகத்தில் நான் நன்மைசெய்யத் தன்மையேவரும் உம்மை வெறுக்கவேண்டியதில்லை ஆனால் என்விதிவசமப்படி என்னிடத்தில் நீர்வந்தபோதேஎன்னைச்சனிபிடித்ததுபோற்காண்கிறதையா பண்டாரமே,

வள்ளியம்மன்சொல்-கண்ணிகள்-இ-ம்-புந்நாகவராளி

அடதாளம்,

மூத்தோர்சொற்றவறுமற்காத்ததற்கோகிழவனாரே நீரும்
முழுதும்பாவியென்றென்மேற்பழியைப்போடுகிறீ ராண்டாரே
காத்துபாண்டிதுமைக்கைதூக்கிவிட்டபலன் போச்சோ கொம்
புக்,கட்டுந்தேன்விட்ட மாவைக்கசக்குதென்றுசொல்லுமாச்சோ
பிழைத்துபோகட்டென்றுபேணிப்பார்த்ததும்பொய்யோதெனி
ற்,பிசைந்தமாவைநஞ்சென்றே இசைந்துசொன்னீரிதுவு மெய்
யோ,மழைத்தவளையைப்போல்வாயைப்பிளக்கிறீர் ஆண்டாரேசு
ம்மா, வம்புக்கோதினைமாவைநம்பித்தந்தேன்கிழவனாரே
தருமபுண்ணியத்திற்குத்தண்ணீர்க்குனைகாட்டுவேன்வாரும் இது
தப்பாதுஎழுமலைக்கப்பாற்போவோம்வாரும்நீரும்

அருமையுடனேயென்றால்அடர்ந்துவாருங்கிழவனாரே இடுக்
கண்புடனேதண்ணீர்சுனைக்காட்டுவேன்பெரியோரே

வசனம்,

அகோவாரும் பண்டாரக்கிழவனாரே இந்தக்காடுகடந்துபோனால் மலையருகிலொருசுனையிருக்குது என்றருமைத்திற் கதைகட்டுகிறேன் என்கூடவாரும் ஆண்டார்கிழவரே,

பண்டாரஞ்சொல்- வசனம்;

நல்லது பேத்தி அப்படியே வருகிறேன் இந்தக்காட்டில் அனேகம் காடி புலி சிங்கம் பலமிருகமிருக்குது அதுகளைக்கண்டாலெனக்குப் பயமாயிருக்கும் உனக்குப் பயந்தானே யிருக்கும் நாம் எப்படிபோகிறதுபேத்தி (வள்ளிவசனம்) ஆனால்கேளுமையா எங்கள்ஜாதி சகலமான மிருகங்களைப்பிடித்துக் கட்டுகிறது இந்தமிருகங்களைக்கண்டால் எனக்கு பயமிருக்காது எனக்கு ஆனையைமாத்திரங்கண்டால் மெத்தபயமுண்டாம் ஆகிலும் இந்தக்காட்டில் ஆனையில்லை பயப்படாமல் வாரும்பெரியவரே,

பண்டாரக்கிழவன்-வள்ளியம்மன் சொல்-கண்ணிகள்,

இ-ம் புந்நாகவராளி-அடதாளம்

பண்டாரக்கிழவன் சொல்,

காமமோதண்ணீர்த்தாக மெத்தயெடுக்குதடிபேத்தி இந்தக்
காட்டைக்கடந்துசுனைக்காட்டித்தண்ணீர்தந்தால்நேத்தி

வள்ளியம்மன் - சொல்.

ஆகட்டும்பண்டாரக்கிழவரே என்பின்னேவாரும் அதோ
அந்தமலைக்குஅப்பாலிருக்குது சுனையாரும்

பண்டாரக்கிழவன்-சொல்,

ஆனபடியால்வாரேன்அன்னமேவுன்புண்ணியந்தான் எந்தன்
ஆயாசந்தீரவேநீர்தந்தால்புசிப்பேன்நானுந்

வள்ளியம்மன்-சொல்.

எகிக்காடுஞ்சுனையெல்லாங்கடந்தோமினித்தேறும் இங்கே
இருக்குதையாசுனைபெருக்கத்தண்ணீருண்ணவாரும்

பண்டாரக்கிழவன்-சொல்

இந்தச்சுனையிற்றண்ணீர்பாசியிருக்குதுவேண்டாமே மெள்ள
இறங்கிக்குடிக்குஞ்சுனைஎனக்குக்காட்டினாலுண்ணலாமே

வள்ளியம்மன்- சொல்.

நிந்தனைசெய்துதண்ணீரைப்பழிப்பாரோஆண்டாரே அந்த
நிரத்தியப்பால்நல்லதண்ணீரிருக்குதென்னுவீரோ

பொது-விருத்தம்,

அப்பாற்போய்நல்லதண்ணீர்கண்டேயாண்டார்
அன்புடன்தண்ணீராயள்ளியருந்தும்போது
எப்பிளப்புந்தகையடங்கிவெளியேமெள்ள

Page number incorrect

ஏறத்தப்போதுடல்நடுக்கமெடுத்துத்தள்ளக்
குப்புறவேவிழுந்துகளையதைவிட்டங்கு
கொண்டகசந்தனியழுந்திக்கூகூவள்ளி
தப்பிவுயிர்போகுதடியெனைஉன்கையால்த்
தழுவியெடுத்தேகளையிற்சாரென்றாரே,

வசனம்,

இந்தப்பிரகாரம் வள்ளியம்மன் சுனையைக்காண்பிக்க ஆண்டார் கிழவர் தண்ணீர்குடித்து தாகந்தீர்ந்து வெளியேவருகிற சமயத்தில் கால்தள்ளாடி விழுவோரைப்போல் பாசாங்கெடுத்து தண்ணியில் முழுகியெழும்பி கூகூவென்று இதுதருணம் கையைக்கொடுத்து எடுத்துவிடுவாயென்றுசொல்ல வள்ளியம்மன் சொல் இறவிதங்காண்க,

வள்ளியம்மன்-பண்டாருஞ்சொல்- விருத்தம்,

இதுநமக்குவாய்ச்சனியோபாடுதானோ
இக்கிழவன்சுனைதனிலேவிழுந்தானேயோ
மதமிகுந்தபண்டாரக்கிழவனாரே
வாருமெந்தன்கைபிடித்துவகையாயிப்போ
பதியுடனுன்கைத்தொடுமுன்குளிர்ந்தேமெய்யிற்
பதட்டமெல்லாந்தீர்ந்ததென்றன்பாக்கியம்பெண்ணே
ததியறிந்துதண்ணீர்தந்தாயேயெந்தன்
தாகந்தீர்ந்ததுமோகந்தவிர்ப்பாய்நீயே

வசனம்,

ஆ-ஆ-நல்லகாரியம் நல்லகாரியம் இந்தக்கிழவனாலே நமக்குத் துன்பம்நேரிட்டது ஓகோ மதம்பிடித்தகிழவனே இப்படியுந் தண்ணியில்விழலாமா இந்தாரும் என்கையைப்பிடித்து கரையேறுங்காணும் (பண்டாரம்) ஆ-ஆ-பெண்ணே உன்கையைத்தொட்டு மேலே யேறிவந்தபிறகு என்சரீரங் குளிர்ந்து தாகமுந்தீர்ந்தது இப்போ வுன்மேல் மோகங்கொண்டேன் என்மோகத்தைத்தீர்ப்பாய்பெண்ணே.

பண்டாரக்கிழவன்சொல் கண்ணிகள்-இம்

நாதநாமக்கிரியை - ஆதிதாளம்,

தாகந்தணித்தாயே — புண்ணிய
தருமத்திற்கேத்தவடாணியே
மோகந்தவிர்ப்பதற்கு — ஒரு
மூலிகையுன்னிடத்தானுண்டு
என்னைக்கிழவனென்றே — நீதனை
யெண்ணுமற்கூடித்தழுவேநன்ற

சொன்னபடிகேழ்ப்பேன் நீயுஞ்
சொல்வதற்கெல்லாருள்ளாயிருப்பேன்
களபங்கமகமெனக் குடங்
கையிலணைத்துத்தழுவமதம்
இளகிக்கிட்டவருவாய் எனக்
கின்பக்கலவிநலந்தருவாய்
விரகாக்கினிமீறி மெய்
மெலிவதெல்லாங்கடைக்கண்பாராய்
சருகாயுலர்வேனே முத்தந்
தந்தணைத்தேகட்டிச்சேரோனே
வேலர்கிருபைசெய்வார் இந்த
மேதினியோரெல்லாம்போற்றிசெய்வார்
வாலைக்குமரிப்பெண்ணே குற
வள்ளியெனைவருத்தாதேகண்ணே.

வள்ளியம்மன்சொல்- கண்ணிகள்.

இ-ம்-புந்நாகவராளி-ஆதிதாளம்

இன்றுயென்னபேச்சுனைத்தாய் குற
யேந்திழைவள்ளியென்றெண்ணாமல்
நின்றதுசாதனையோ என்ன
நீதிசொன்னாயடாபாதகனே
போதமெல்லாங்கெட்டுதோ கெட்ட
புத்தியுனக்குப்பிடிபட்டுதோ
நீதியில்லாதபடு கட்டி
நில்லாதேயிந்தநினைவைவிடு
தீண்டாதபாவியையோ நீயுஞ்
செய்ததவமெல்லாந்தீவினையோ
வேண்டாம்பற்கெஞ்சாதே நீயும்
வீண்செல்வப்பிள்ளைபோற்கெஞ்சாதே
நரைத்துப்புலச்சைகெட்டு இன்று
நாளையிற்சாகிறநாளைவிட்டு
வெறுத்தமொழியேது சிவ
வேடமுனக்குப்பலியாது

வள்ளியம்மன்சொல் விருத்தம்.

பேசாதேநரைக்கிழவாஎதிர்நில்லாதே
பிச்சைகொளும்பரம்பரையாண்டிநீயல்ல
ஆசாரமேதுசிவவேடமேது
அறிவுகெட்டமூடனுக்கதுதங்காது

ஏசாமலேசியும்பின்போவதில்லை
எத்தனையோசொன்னாலும்ரோஷியில்லை
கூசாயோவீண்கிழவாஉனக்கேனிந்த
கொஞ்சபுத்திநினைந்திறற்கூடாதென்னே.

வசனம்.

ஓ ஓ பேசாதேகிழவா பிச்சைக்குவந்த ஆண்டிபெண்டுக்காசைப்பட்டதுபோல இருக்கிறதுநீர்பெரியவராயிருந்துசிவவேடம்பூண்டும்உனக்குஇதுதகாதுநான்என்ன சொன்னபோதிலும் அறிவுஆண்மையில்லை அறிவுகெட்டவனாயிருக்கிறாய் உன்னுடையநினைவிங்கேமுடியாது வந்தவழியேநடவும் பண்டாரக் கிழவனாரே.

பொது-விருத்தம்.

மந்திரமாயுறுமருட்டிவேலன்மோக
வசையுறாத்துவள்ளியுஞ்சம்மதியாதாலே
எந்தவிதஞ்சொல்வோமென்றெண்ணியெண்ணி
ஏமாந்துதனக்கிசைந்ததுணைவனான
தந்திமுகக்கணபதிவந்திடத்தியானித்தார்
சண்முகன்கோபந்தவிர்க்கும்படியாய்மேரு
முந்திவந்ததெனக்குறமாதெதிரேவந்து
மும்மதகுஞ்சரசொரூபமுழங்கினரே.

இதுவுமது-சந்தவிருத்தம்.

ஓதுநினைந்ததுபோலேயெழுந்தெதிர்சோதனையின்படியே
சோபிதகொம்பிருபாலொளிதந்திடசூல்முகில்சென்றதுபோல்
மேதினிகொண்டுயர்சேடனடுங்கிடவீரமிகுந்திடவே
மீறியடர்ந்துவுதாரநற்செங்கரம்வீசிநெடும்பனைமேல்
மோதியெழுங்கிரிநீடுமரங்கள்சமூலமதிர்ந்திடவே
மோகமனங்கொள்குகாதிபனின்புறமோடிசெயுங்குறமான்
ஆதரவொன்றுமிலாதுபயந்தனைவாவெனவுஞ்சொலவே
ஆடிமுழங்கிமதாகரமிஞ்சியயானையும்வந்ததுவே.

வசனம்.

இந்தப்பிரகாரம் வள்ளியம்மனுக்குச் சுப்பிரமணியர் அநேகவிதஞ்சொல்லியும் கேளாமல் வள்ளியம்மன் கோபித்துப்புனத்திற்குப்போகிறசமயத்தில் சுப்பிரமணியர் இனியென்னசெய்வோமென்று தனக்குமூத்தோனாகிய கணபதியைநினைக்க அப்போது விநாயகர் ஆனையுருவங்கொண்டு வள்ளியம்மன் முன்வருகிறவிதங்காண்க.

ஆனைவருகிற-தரு-இ-ம்-தன்னியாசி-ஆதிதாளம்.

கடகரிவந்ததுவே மதம்பொழி
கடகரிவந்ததுவே
கடகரிவந்தது-அடவிநெருங்கியே
வடிவினெடுங்கிரிமுடியதிரும்படி.

(கட)

இருபுறமுங் கவியும் சிறந்திடுஞ்
சிறகளகின் செவியும் கிரியெனப்
பருங்குமிளுஞ் சிரமும் துதியொடு
வரிபொருவுங் கரமும்
விரசிஞுறைந்திடும்-விஜையில்மரஞ்செடி
முறிவுபடும்படி-அதிரநடந்தெதிர் (கட)
மலையின்வினங் கிடவே உயர்ந்துபெய்
மழையினமிழ்ந் திடவே வனந்தனில்
கலகமெதும் விடவே வள்ளிநொந்
தலறிநடுங் கிடவே
குலவுமதம்பெற ஜலதிநிதம்பொழி
திலகமலங்கிர்த-நுதலில்விளங்கிய (கட)
ஆனைவருந் ததியும் சிறந்தமு
மேன்மையுறுங் கதியும் தெரிந்திடும்
கானவரும் புனமும் கலைமா
மானுமுடும் மினமும்
வானவரும்பயமாயெதிரஞ்சிட
யானைபெருங்குறவோர்மகள்கெஞ்சிட (கட)

விருத்தம்.

மதியெரிந்தகடலெனவிதிட்டேசீறி
மதமாரிபொழிந்தானைவரவேகண்டு
பதறிவள்ளிநடுநடுங்கியறிவுகுன்றி
பஞ்சபூதமுங்கலங்கிப்பதைத்துவாடி
கதறியிருகாலொடுகால்பின்னிச்செய்ய
கண்களினீர்சொரிந்திடவேலாயுதாவந்
துதவுமுமக்கபையமென்றேகிழவன்பின்சென்
றோடியோடிப்பயந்தேயொளிக்கின்றாளே,

வசனம்,

இந்தப்பிரகாரம் விநாயகமூர்த்தி யானைரூபங்கொண்டு வருகிறதைப்பார்த்த வள்ளியம்மனுனவள் நடுநடுங்கிப் பயந்து வேலாயுதக்கடவுளை நினைந்து வாடி பஞ்சபூதமுங்கலங்கி பண்டாரக்கிழவன் பின்னே ஓடிவந்து சொல்லுகிறவிதமெப்படியென்றால்,

பண்டாரக்கிழவன்-வள்ளியம்மனுக்குச்சொல்

விருத்தம்.

தீட்டியவேல்விழிமானேகுறவர்மாதே
செத்திடநீசுனையில்முன்னந்தள்ளிப்பின்னுங்
காட்டியென்னைக்கெடுப்பதற்கோபிறகேவாராய்
கள்ளிதொடாதென்றனைநீசபடஞ்செய்தாய்
மீட்டுமைமறக்கச்செய்தேனோகிழவனேசெ

மேகம்போலானைமிரட்டுருட்டுதையா
ஆட்டமிதுகொள்ளாதேயோராடாதே
அடைக்கலங்காத்தென்றுயாமகற்றுவீரே,

வசனம்,

ஓ ஓ-குறப்பெண்ணே முன்னம் நீகனேயில் சாகும்படியாக்செய்தாய் இப்போது காட்டிவிருக்கும் யானையைக் கூட்டிக்கொண்டு என்னை அதின் முன்காட்டிக்கொடுக்கவாவந்தாய் எனைத்தொடாதே என்கிட்டவும் வாராதே நில்லாய் பெண்ணே (வசனம்) ஆனால் பண்டார சுவாமிகளே நான் உம்மிடத்தில் மீட்டிமை செய்யவில்லை இப்போது கறுத்தமேகம்போல் ஒருயானைவிறிட்டு என்னைக்கொல்லவருகிறது கைகால் நடுக்குது இவ்வேளை உம்மிடம் அடைக்கலமாய்வந்தேன் இப்போ தென்னைக்காத்து இரட்சிக்கவேண்டுமையாசுவாமி,

வள்ளியம்மன்சொல்- கண்ணிகள்,

இ-ம்-கண்டா- அருவதாளம்,

ஐயரேகிழவனாரே எனக்
கன்புள்ளபண்டாரசுவாமி
மெய்யலாம்பதறயானை என்னை
மிரட்டுதேநானென்னசெய்வேன்
வீறிடுதேஎன்னசெய்வேன் ஆனை
விழுங்கவருதென்னசெய்வேன்
ஆரிடத்திற்செல்வேனையா எனக்
காதரவுநீரோமெய்யா
வீசித்துதிக்கையால்வாரி ஆனை
விழுங்கவருதையாமீறி
பாசமுற்றிங்கெல்லைநீரும் இங்கு
பார்த்தெனதுகவலைதீரும்
புனத்திலென்னைக்காக்கொணாதோ நானும்
புலம்புவதைத்தீர்க்கொணாதோ
தனித்துவந்துயானைக்கஞ்சி மெத்தத்
தஞ்சமென்றேனுமைக்கெஞ்சி
மதயானையைவிலக்குமையா உந்தன்
மைத்துனியாகிறேனையா
இதமாயென்னைக்காப்பீரானால் உமக்
கேற்றக்கொழுந்தியுமாவேன்
கடகமதவானையேக எந்தன்
கண்முன்னேதோற்றுமற்போக
உட்பேறுநீர்விலகச்செய்தால் உமக்
குற்றபெண்டாட்டியேனையா

பண்டாரக்கிழவன்சொல்-மேற்படி-கண்ணிகள்,

இ-ம்-சங்கராபரணம்-துருவதாளம்.

காரியங்கைக்கூடுமட்டும் பெண்ணே
கைவசமாகிறேனென்பாய்
வீரியமாய்த்தீர்ந்தபின்பு நானு
மேவுவேனோபோபோவென்பாய்
ஆறுமுகவேலர்மீதில் பெண்ணே
ஆணையிட்டுத்தந்தாற்போதும்
கூறியெனக்குக்கைபோட்டுத் தந்தால்
கோண்டமரம்போலாகட்டும்

வள்ளியம்மன்சொல்-மேற்படி-கண்ணிகள்

சுப்ரமண்யர்பேரிலாணை உந்தன்
சொந்தப்பெண்டாவேனுனே
தப்பாதுந்தன்கிருபைகாணும் ஆணை
தன்னையும்விலக்கவேணும்

பொது விருத்தம்.

திடத்துடனதட்டியானைச் சிறவேபயத்துவள்ளி
அடைக்கலமென்றாண்டானையா வியத்தழுவிக்கட்டி
அடித்தெழுந்தனமழுந்தத் தளிர்க்கையாலணைத்தபோதே
தொடுத்ததுமுடித்தோமென்னத் துள்ளினான்கிழவன்றானே.

வசனம்,

இந்தப்பிரகாரம் வள்ளியம்மனையானைத்துரத்திக்கொண்டு வருக வள்ளியம்மன்பண்டாரக் கிழவனிடம்போ யடைக்கலமாகப் பண்டாரக்கிழவன் வேலர்மேற் சத்தியஞ்செய்யச்சொல்ல அது போல் வள்ளியம்மன் பெண்டாகிறேனென்றுசத்தியஞ்செய்து கட்டிக்கொள்ளநினைந்தது முடிந்ததென்று அப்பால் பண்டாரக்கிழவன் ஆனையைப்போகச் சொல்லுகிறவித மெப்படியென்றால்.

பண்டாரக்கிழவன்சொல்- விருத்தம்.

இமையவரன்பாய்ப்போற்று மிறைவனேஎனக்குமூத்த
தமையனேசோதியேநீர் சார்ந்திடுங்கிருபையால
கமலமின்வள்ளியெந்தன் கைவசமானாளிப்போ
சமயமிச்சமயங்கண்டுன் தலமதிலேகுவீரே.

வசனம்-

அகோவாரும் எனதுதமையனாகிய யானைமுகக்கடவுளே நான்நினைத்தப்பிரகாரம் இந்தவள்ளி என்கைவசமாகிவிட்டாள் ஆகையால் இப்போது நீர் நமதுதலத்திற்குப்போய்விடும் தமையனே (ஆனைசொல்வசனம்) ஓகோகேளாய்ச்செல்வா அப்படியேபோய் வருகிறனப்பா.

பொது-விருத்தம்.

இளவன்போல்வந்தவேலன் இளருந்தன்சொரூபங்காட்டி
நிலவெனத்தொடர்ந்தேயின்று நினைந்ததுமுடித்ததென்று
இணைமயில்வள்ளிதன்னோ டிணங்கினனையன்மையால்
தனுவினார்மதனபோகந் தாங்கினாரோங்கினாரே.

இதுவுமது-விருத்தம்,

பால்மொழிமாதினைத்தழுவியணைந்துமப்போ
பகடிவிளையாடிநன்றாய்ப்பழகிச்சேரும்
வேலன்மருட்டியவேடமெல்லாம்விட்டு
மெய்ச்சொரூபங்கொண்டுவடிவேலுந்தாங்கிக்
கோலமயிலும்பனிரெண்டாய்ந்ததோளுங்
குளிர்ந்தகண்களீராறுமுகங்களாறுஞ்
சோலையிலங்கிள்ளைவள்ளிமுன்னேதோன்ற
தொடுக்கின்றார்திருக்காட்சிகொடுக்கின்றாரே.

வசனம்,

அகோதெப்படியென்றால் இந்தப்பிரகாரம் பண்டாரக்கிழவன் வள்ளியம்மனைக்கூடிப் புணர்ந்து தான்நினைந்தது முடிந்ததென்று சந்தோஷமடைந்து இனிமேல் நம்மிடவாலாறு தெரியவேண்டுமென்று மயில்வாகனரூடராய் ஆறுமுகமும் பன்னிருகையோடு தன்சுயரூபத்தைக்காண்பித்து வள்ளியம்மனுக்குக் காட்சிகொடுக்கிறவிதங்காண்க.

சுப்பிரமணியர்-வள்ளியம்மனுக்குக்
காட்சிகொடுக்கும்-தரு-இ-ம்- நாதநாமக்கிரியை
அடதாளம்.

காட்சிகொடுத்தார் சுப்பிரமணியர்
காட்சிகொடுத்தார்

காட்சிகொடுத்தாரே-தாட்சிவாரமலே
ரச்சியம்பணியுஞ்- சாம்பராச்சிய- வள்ளிமுன்னே
கோலமயிலும்-பனிரெண்டுதோளுங்
குலாவியசேவற்-கொடியுங்-கடம்பும்
வாலகுமாரம-தாகவே-லீலாவி
சாலகுருபர-வேலர்-தெரிசனைக் (காட்சி)

பூரணசெங்-கமலக்-கருணாகர
பூர்த்தியுமாதிரு-நேத்ரவி-சாலமும்
காரணமெய்த் திருநீரணி கோலமுங்
காட்டியேகதிர்பெறத் தீட்டிய-வேலவர் (காட்சி)

காட்டினில்வரும்-வேடுவராய்ச்-சொந்
தபடம்பொருந்திய-மானிடரா-யுரு

வாட்டுங்கிழவ-வடிவினராய்க்குற
மாதேவுனைச்சேரும்-நாதனு-நாமெனக் (காட்சி)

வள்ளியம்மன் - போற்றிவிருத்தம்.

சரவணபவனேபோற்றிச் சடாக்ஷரமுதலேபோற்றி
காதலகமலர்போற்றிக் கழுகுமாமலையேபோற்றி
அரகரமுருகாபோற்றி ஆறுமாமுகனேபோற்றி
வரமுநிக்குருவேபோற்றி வரதனேபோற்றிபோற்றி,

வசனம்-

ஓம் அரகராமுருகா சரவணபவனே சடாக்ஷரசொரூபா கழுகாசலா ஆறுமுகக்கடவுளே குறுமுநிக்கு குருவாய்விளங்காநின்ற வரதனே போற்றிபோற்றி சுவாமி,

இதுவுமது-துதிவிருத்தம்.

வேறுபேதகநினைந்தேனுமாவுந்தன்
வித்தையறியாமலென்பெண்புத்தியாலே
கூறினதுந்தெரிந்துதெரியாதுமுன்செய்
குற்றமுநீர்பொறுத்தெனையாட்கொள்வாயையா
ஆறுமுகனேகுகனேயெனைத்தான்சேர்ந்த
அருமைமணவாளாவென்னையாமெய்யா
தேறுதலாயடியாளைக்காத்தேயுன்றன்
தெரிசனைதந்தருளுதவுந்தேவதேவே.

இதுவுமது- விருத்தம்.

ஆவலுடனெந்தனைப்பெற்றெடுத்ததந்தை
அன்னையுமுன்செய்தபெரும்புண்யந்தானோ
காவலெனத்தினைக்காக்கவரும்போதேநான்
கண்டசகுனப்பலனோகவலைதீர்ந்தேன்
கூவுமயிலேறியதற்சொரூபங்கண்டேன்
கூடிவிளையாடியணைந்திடவும்பெற்றேன்
மேவியதீவினைதீர்ந்தேநினதுபாதம்
வேண்டினேனெனையுமுழுதாண்டிடவே.

வசனம்.

சரணஞ்சரணமெம்பிராணநாதரே நான்பெண்புத்தியால் தங்களைத்தெரியாமற் சொன்ன குற்றத்தைப் பொறுத்து பூரணக்கிருபைபுரிந்து எனைத்தமது சொந்தமனைவி யாக்கிக்கொண்டு அடியாளைக்காக்கவேண்டும் சுவாமி ஆ-ஆ-எனைப்பெற்றெடுத்ததந்தைதாய் செய்த புண்ணியந்தானோ அல்லது நான்தினைக்காக்கவரும்போது கண்டசகுனப்பலன்தானோ தங்களை மயில்வாகனரூடராயுங்கண்டு கூடி யணைந்திடவும் பாக்கியம் பெற்றேன் நான்செய்த வினையும் தீர்ந்தேன் உமதுபாதாரவிந்தத்தை நாடினேன் என்னை முழுமையும்ஆட்கொள்ளுஞ்சுவாமி பிராணநாயகரே.

வள்ளியம்மன்சொல்-கண்ணிகள்-இ-ம்- புந்நாகவராளி.
ஆதிதாளம்,

சோதியேசுடரொளியே ஆதிநாயகா என்னைச்
சொந்தமென்றுசேர்ந்தெனையாளவந்தநாயகா
கோதிலாதச்சேர்வைதந்தஎன்னையாண்டவா நான்செய்
குற்றமெல்லாம்பொறுத்தென்மேலன்புபூண்டவா
அன்றிலும்பேடும்போலென்னையணைந்துமருவுவாய் உம்மை
அகன்றிடாதிருக்கநீர்கிருபைதருவாய்
மண்டலந்தன்னிலேநானுமுறப்பதில்லையோ இனி
மறுத்தொருஜென்மமில்லாமல்வரமருள்வாயே

சுப்பிரமணியர்சொல்-கண்ணிகள் இ-ம்-புந்நாகவராளி
ஆதிதாளம்.

கோதிலாக்கங்கைக்கரையிற்கூடினோம்பெண்ணே நீசெய்
குற்றமெல்லாம்பொறுத்தின்பந் தேடினோம்பெண்ணே
தீதில்லாமற்றோர்ஜெனனத்திங்குவராதே வள்ளித்
தேன்மொழியேவுந்தனிடச்சிந்தைநோகாதே

சுப்பிரமணியர்சொல்-விருத்தம்,

ஆதியிலேதிருமாலின்மகளாயுன்னை
ஆரணங்குகமலமகட்பெற்றாள்நீயும்
மேதினிற்சரவணப்பொய்கையிலேஎம்மை
மேவுதற்குத்தவம்புரிந்தாயிதறிந்துமுன்னஞ்
சீதமடமான்வயிற்றிற்பிறப்பாய்வேடர்
தெரிந்தெடுத்துவளர்த்திடுவார்சேர்வோமென்றேன்
ஓதியசொற்படிபோலேவந்தோமிங்கே
உகந்துமிருதனந்தழுவியுகந்தோம்பெண்ணே,

வசனம்,

அகோகேளாய் பெண்ணேவள்ளி ஆதியில்நீ திருமாலின்மகளாய் மகாலட்சுமி பெற்றாள் நீபருவமானதின் பிறகு சரவணப் பொய்கையில் என்னைப்புணரும்படி தவஞ்செய்தாய்அப்போது நாம்உன்னிடத்தில்வந்து இந்தஜெனனத்தி லுன்னைச்சேருகிறதில்லை நீகானகத்தில் மான்வயிற்றிற்பிறந்து வேடர்களெடுத்துவளர்ப்பார்கள் அப்போதுன்னைச்சேருவோமென்றேன் அதுபோலவிந்தக்கங்கைக்கரையில் உன்னைச்சேர்ந்தோம் பெண்ணேவள்ளி (வள்ளியின்வசனம்) ஆனால்தங்களுடையவிபரமும்என்னுடையவிருத்தாந்தமுந் தெரிந்துக்கொண்டேன் மகாசந்தோஷமாச்சுது தினைப்புனம்போவோம்வாரும்சுவாமி! சுப்பிரமணியர்வசனம்) நல்லதப்படியேநீமுன்னேநட இதோபின்னால்வருகிறேன் பெண்ணே.

பொது- வசனம்.

இந்தப்பிரகாரம் சுப்பிரமணியரும் வள்ளியம்மனும் கூடிப்புணர்ந்து பூர்வீகத்தையும் சொல்லியபின் வள்ளியம்மன் சுவாமியைத் தினப்புனம் அழைக்க சுவாமிமுன்னே போய்விடு நான் பின்னால்வருகிறேனென்றுசொல்ல அப்போது வள்ளியம்மன்தினைப்புனம்வரும்போது அவ்விடம் பாங்கிமார் அம்மனைக்கேழ்க்கிறவிதங்காண்க,

பாங்கிமார்-வள்ளியம்மன்சொல்- கண்ணிகள்,

இ-ம்-குறவஞ்சி-ரூபகதாளம்,

பாங்கியர்- சொல்.

முன்னமேபோனவளுமிந் நேரமென்னசெய்தாய் உத்தன்
முகம்வாடிஇருப்பதென்னமுளைந்தசேதிசொல்வாய்

வள்ளியம்மன்- சொல்,

கன்னல்மொழிப்பாங்கியரேகானகத்திற்சென்றேன் அங்கே
கானல்சலந்தேடித்தேடிக்காணவிடாய்கொண்டேன்

பாங்கியர்- சொல்.

இதுவரையிலெங்கேபோனாய்த் தெரியச்சொல்வாயம்மாபோன
இடந்தனிலேநடந்தசேதியியம்பிடுவாய்சும்மா

வள்ளியம்மன்-சொல்.

கதிபெறநன்னீர்ச்சுனையங்கிருக்கவுமேகண்டேன் நான்
கனிந்ததிலேநீராடக்கானகத்திற்சென்றேன்

பாங்கிமார்- சொல்.

வஞ்சியேவனக்குயிலேவலியகுறமாதே இப்போ
மங்கையேநின்கண்சிவந்தமாற்கமேதிப்போதே

வள்ளியம்மன்-சொல்,

கொஞ்சுங்கிளிபாங்கியரேகோதையரேகேளீர் காட்டில்
கொடூரமானவெயிலதிற்கண்சிவந்ததடிதோழீர்

பாங்கியர்-சொல்.

நங்கையரேவுன்றனத்தினகக்குறிகளேது அதை
நன்றாகவெங்களுக்குநவிலுவாயிப்போது

வள்ளியம்மன்- சொல்.

மங்கையரேமார்பிற்குறிவந்ததுந்தெரியாதோ இப்போ
வண்மையுடன்செடிமுள்பட்டால்வடிவுந்தோணாதோ

பாங்கியர்- சொல்.

உயிர்க்குயிராய்நாமுமிருந்தேஜொலிக்கின்றாயே இன்று
உள்ளதுசொல்லென்றாலுன்முகஞ்சுளிக்கின்றாயே

வள்ளியம்மன்-சொல்.

இபற்கையோஇதவுங்களுக்கார்சொன்னார்கள்மதியோ காட்டில்
ஏகினதில்நீங்கள்சொல்லவென்றலையின்விதியே

பாங்கியர்சொல்-விருத்தம்,

மைமுகில்போலிருண்டகுழல்சரிந்தவாறும்
மணிவயிரமணிந்தவச்ரவளைகளெல்லாம்
கைநழுவியிருப்பதுபோற்காணும்வாறும்
கந்நியேவுன்னிதழ்வெண்மைகாட்டும்வாறும்
செய்யசெழுங்கமலமுகக்கொங்கையின்மேற்
செங்கைநகக்குறியழுந்தித்தெரிந்தவாறும்
பொய்யுரையாதெமக்குமுன்னைநிஜமதாகப்
புகலுவாய்பூவையரேபொருந்தத்தானே.

இதவுமது- விருத்தம்.

காதளவுபாய்ந்தமதத்தேறுங்கயற்கண்ணியுந்தன்
கள்ளமெல்லாம்
ஏதெனவுங்கேட்பதென்னதாய்மாமன்குலந்தெரியா
தெங்குமுண்டோ
பேதமையாற்செய்தசிறுபிள்ளைகுற்றம்பொறுக்காத
பிதாவுமுண்டோ
சோதனைநான்செய்யவில்லைநடந்தசேதியொளியாமற்
சொல்லுவாயே,

வசனம்.

கேளாயம்மா வள்ளித்தாயே உன்னுடைய கூந்தல்சரிந்தும் கைவளையல்நழுவியும் உன்னிதழ்வெண்மைநிறமாகியும் இரண்டு கொங்கையின்மேல் நகக்குறியும் இவ்விதமாயிருக்கிறபடியால்-எங்களுக்கு ஒளியாமற்சொல்லுவாய் உன்னுடைய கள்ளமெல்லாமெங்களுக்குத்தெரியும் தாயாருடன் கூடப்பிறந்தமாமன் குலந்தெரியாதா அப்படிப்போல நீசெய்தது தெங்களுக்குத்தெரியாதா பிள்ளைசெய்தகுற்றம் பிதாபொறுக்கவேண்டும் ஆனதால் நடந்த சேதியைச்சொல்லுமம்மாதாயே.

வள்ளியம்மன்- விருத்தம்,

உயிர்க்குயிராய்நாயிருந்துமெனதுநெஞ்சம்
உள்ளதுதெரியாதோஉண்மையோதச
சயிக்கினையாயென்னைஇனிப்பழித்தவார்த்தைத்
தான்கேட்கவிதிவசமோசகியேபெண்ணே
பயில்குணமாய்ப்பேசாதேருசுவாய்க்கண்டால்
புகர்வதன்றிவீண்பழியைபகரலாமோ
ஜெயிக்கஉன்னால்முடிந்திடுமோபோபோவென்ன
சேதிசொன்னீர்சேடியரேதிறமாய்த்தானே.

வசனம்.

கேளும்பாங்கிமார்களே நாமுயிர்க்குயிராயிருந்தும் என்மனமுங்களுக்குத்தெரியாத நிஜவார்த்தையைச்சொல்ல-என்னைநீங்கள் நாவுக்கேர்த்தபடி சொல்லலாமா அதுவுமென்தலைவிதி வசந்தான் நீங்கள் அப்படிக்குச்சொல்லவேண்டியதில்லை யாதொருகாரியமுங் கண்ணினால் ருசுவாய் பார்த்தால் சொல்லுவதல்லாமல் பார்க்காமற் சொல்லக்கூடாது இதுகளையெல்லா மனதில் நினையாமல் சொல்லலாகுமோ பாங்கிமார்களே-

பொது-விருத்தம்.

நாணமின்றிவள்ளியும்பாங்கியர்கள்முன்னே
நானறியேனென்றுமெனநவிலும்போதே
வாளியவேலவர்வேடரூபங்கொண்டு
மாந்தளிரொன்றேந்திவரும்வழியிலென்றன்
பாணமதுபட்டுருகியொருமானுங்கள்
பக்கம்வந்ததடத்தையால்பார்த்துவந்தேன்
காணீரோமானழகீரெனத்தெளிந்த
கள்ளனெனத்தாதியருங்கருதினாரே.

வசனம்.

இத்தப்பிரகாரம் பாங்கிமாரிடத்தில் வள்ளியம்மன் தர்க்கஞ்செய்துக்கொண்டிருக்க அவ்விடத்தில் வேலாயுதக்கடவுள் ஒருவேடுவர் வேடமெடுத்துக் கையில் வில்லம்புகொண்டு புனத்தில்வந்து பாங்கியரிடம் எனதுமானொன்றடிபட்டு உங்களிடம்வந்ததோவெனக்கேட்க அப்போது பாங்கிமார்கள் இவன்கள்ளனைப்போலிருக்குதென் றெண்ணிக்கொள்ளும்போது வேடனாய்வந்த வேலர் சொல்லுகிறவிதங்காண்க.

சுப்பிரமணியர்-வேடருக்கும்-பாங்கிமாருக்கும்,
சம்வாதம்-கண்ணிகள்-இ-ம்-காம்போதி-அடதாளம்,

வேடன்-சொல்.

கைக்கணையாலெய்தமானிங்கேதான்வரக்
கண்டதுண்டோகிள்ளைகாள் சும்மா
கள்ளத்தனமில்லாமலுள்ளதைச்சொல்லுங்கள்
கந்நியரேபிள்ளைகாள்

பாங்கியர்-சொல்,

இக்குத்தடமாதியிங்கேயொருமானுந்
திகைத்துவந்ததென்றுயண்ணே இப்போ
தினமாய்நீயெய்தமானிங்கேகாணிலோம்
திரும்பியேபோய்விடுமண்ணே

வேடன்-சொல்.

எக்கியெக்கிறடத்தோடியேவந்தமான்
இங்கேவிட்டெடக்கேபோகும் சும்மா
இல்லையென்றுற்றடஞ்சொல்லாதேவீணே
இதுபொல்லாப்பாகும்

பாங்கியர்-சொல்.

அக்கணாயாய்ச்சொன்றாய்முக்கியமாயெங்கள்
அண்டையிலேவந்துவேடா உன்சொல்
அடுக்காதுஇங்கேதொடுக்காதுவீண்சண்டை
அண்ணேநீகள்ளனேடா!

வேடன்-சொல்.

எள்ளளவாகிலுமெண்ணிநீபாராமல்
என்னைக்கள்ளனென்றாய் நான்
எய்தமானிங்குவராமலெவ்விடம்போம்
இயம்பிடுவீர்நன்றாய்

பாங்கியர்-சொல்,

உள்ளங்கைக்குள்ளேநீவைகுந்தங்காட்டுகிறாய் வீணாய்
உள்ளதுந்தக்காது
உக்கிக்கிரணம்பொட்டெக்கியுநீயிக்
குளத்தமான்சிக்காது

வேடன்-சொல்.

ஆரணங்கேவந்தமானையொளித்தும்
அறிகிலோமென்றுரைத்தீர் இது
அநியாயமல்லவோஎன்மான்சிக்காதென்றீர்
அதைநீங்கள்விட்டிடுவீர்

பாங்கியர்-சொல்,

காரணமாகவேநீயெய்தமானுக்குக்
கால்ரெண்டிலைகையுமுண்டோ இரு
காதும்பொன்னோலையுங்கோதுங்குழலும்
கழுத்திற்பணியுமுண்டோ

வேடன்-சொல்,

மங்கையரேசகியேயொருகாரியம்
வாக்கினிற்பேசநன்றே நீ
வழுத்தியசொற்படிஎந்தன்மானுக்கு
வகையுண்டுகாப்பேனின்றே

பாங்கியர்-சொல்,

இங்கேயுரைத்திடுவோமென்றுசொன்ன
தெனக்குத்தெரியுமன்னே இன

ஏர்க்காதுந்தனுக்கிடுக்கமும்வந்திடும்
இதுநீதியல்லவண்ணே

பாங்கியர்சொல்-விருத்தம்.

தனித்துரைக்கவேண்டுமென்றுசொன்னீரந்தச்
சமாசாரம்யானறிவேன்சாற்றக்கேளும்
இனித்தமொழிவள்ளியும்நீர்சுனைக்குப்போன
இடத்தினிலேசேர்ந்தணைந்ததென்னசூதோ
மனத்திடமோமாயமிதோவுதவியான
மாதரில்லாமற்புணர்ந்தால்மருங்கோசொல்லாம்
உனக்கும்வள்ளிதனக்குமொருவகைவாராமல்
உயிர்க்குயிராய்காப்பதெவருரைத்திடாயே.

வசனம்.

ஓகோ கேளுமையா வேடரே நீர்எங்களுக்குத் தனித்துசொல்வேனென்ற சமாச்சாரம் எங்களுக்குந்தெரியும் எங்கள்வள்ளியம்மனை நீர்சுனைக்குப்போனவிடத்தில் சேர்ந்தணைந்தீரோ என்னசூதோ இதுஎன்னமாயமோ நாங்களில்லாமல் நீர்புணர்ந்தது மரியாதையோ உங்களிருவருக்கும் யாதொரு இடரில்லாமல் காக்கப்பட்டவர் யாவர்சொல்லுமையாவேடரே.

பாங்கியர்சொல்-விருத்தம்.

மைக்குழல்சோர்ந்திருவிழியுஞ்சிவப்பச்செங்கை
வளைநெரியவிருவரொன்றாய்மருவும்போது
பக்கவலுவாரொருவரில்லாவிட்டால்
பலபேர்க்குந்தெரியமதிற்பகைவந்தெய்துஞ்
சிக்கெனவெம்மிடத்தினிதுசொல்லொணாதோ
தேவிவள்ளிக்கெங்கள்மனந்தெரிந்திடாதோ
அக்கரையோவெமக்கினியேன்வீண்பொல்லாப்பு
அனுபவிப்பீர்வருவதும்பட்டறிகுவீரே.

இதுவுமது-விருத்தம்,

நடந்தகாரியங்கள்முன்னேநடந்ததைச்சொல்லியென்ன
அடர்ந்துயானையைத்தான்குத்திச்சொல்லினாள்மறைப்போநாங்கள்
மடந்தையைவனத்திற்கூடிவந்துபோயிருப்பீரிந்த
இடந்தனில்நில்லும்யாங்களேகியேவாரோமையா.

வசனம்.

இன்னமுங் கேளுமையா வேடரே எங்கள் வள்ளித்தாயை நீர்மருவும்போது எங்களனுமதியிருந்தால் உங்களிருவருக்கு மேன்மையுண்டு அவ்விதநடவாத காரியத்துக்கு யாவருக்கும் பகையுண்டாம் இதுஎங்களுக்கு ஆகிறதென்ன முன்யானையைக்குத்தி யொருபொய்சொல்லினால் மறைத்தான் அப்படிப்போல நீர்உம்முடைய எண்ணத்தை யெங்களுக்குத் தெரிவித்தல் ஒரப்போக நா

ங்கள் நடத்தோமா ஆகிலுஞ்சந்தேகமில்லை நீரிவ்விடமிரும் யாங்கள் வள்ளியிடம்போய் மறுபடியும் வருகிறோமையா வேடரே.

பாங்கியர்சொல்-விருத்தம்.

சாந்தகுணமானின்றவள்ளித்தாயே
தலைகயொருமோரோலைகயிற்றனுவொன்றேந்தி
மாந்துளிரோன்றேந்தியொருமானைத்தேடி
வந்துநின்றார்நீயறிந்தால்வழுத்துஞ்சும்மா
பார்த்திநின்றிங்கொளியாதேசொல்வாய்த்தேனும்
பாலுமுடனுயிருமெனப்பழகிறோஙன்று
சேர்த்திருந்தும்வேற்றுமையேசெய்தாயுந்தன்
சேதியெல்லாந்தெரியுமினிச்செப்புந்தானே.

வசனம்.

அகோவாராய் வள்ளித்தாயே கையிலொருவில்லும் அம்புமேந்தி ஒருமானைத்தேடி யொருவேடன்வந்துநிற்கின்றான் அவனை நீயறிந்தால் ஒளியாமல் எங்களிடத்தில்சொல்லு நாம் தேனும்பாலும்-உடலுமுயிரும்போ லிருந்தோமே அப்படியிருக்க எங்களுக்கு மறைத்துச்சொன்னாயே உன்சேதியெல்லாம்எங்களுக்குத்தெரியும்இப்போதாவது நிசவார்த்தையைச் சொல்லுமம்மாதாயே,

வள்ளியம்மன்சொல்-கண்ணிகள்.

இ-ம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

வின்னுகிறேனுள்ள சேதிசொல்லக்கேளாய் சகியே
மெத்தமெத்தவுண்டானதை விளம்பக்கேளாய்
கள்ளமில்லாவுங்களிட மறைத்திடுவேனோ சகியே
கனவிலுமுங்களுக்குப் பொய்யுரைத்திடுவேனோ
விதிவசஞ்சூட்டிவைத்ததைக் கூறியாவதேன் கண்ணி
மீதிற்சிக்கிக்கொண்ட மீன்சிந்தைநோவதேன்
பதிவுடனேத்துவேடர்போ லிங்குவந்ததும் என்முன்
பஞ்சையைப்போற்றஞ்சமென்றே கெஞ்சிநின்றதும்
வேங்கைமரமாய்ப்பரணிலோங்கிநின்றதும் சகியே
மெத்தவேழைக்கிழவனைப்போற் றூங்கிநின்றதும்
தாங்காத்தண்ணீர்தவிக்குதென்றேங்கிநின்றதும்பின்பு
தண்ணீர்ச்சுனைக்காட்டிட நானேகிசென்றதும்
ஆசையானப்பெண்மணியென் றுகைபிடித்தும் சகியே
ஆனைவரவழைத்ததும் யான்றுடித்ததும்
ராஜியாகநின்றதின் பின்னானைபோனதும் அங்கே
நாமெதன்போலுமென்னைக் கூடுவானதும்
ஒவியமேயப்பால் வேலுமயிலுங்கண்டதும் எனக்
குருத்துவந்தும்வேல்வர் சொருபங்கொண்டதும்

ஆவியொன்றுடலிரண்டுமாகினேமுன்னே    சகியே
அந்தவேலரிந்தவேடராமடிபெண்ணே

பாங்கியர்சொல் விருத்தம்.

அப்படியேநல்லவிசேஷந்தானீயும்
ஆண்டகுலதெய்வமதை யணைந்துக்கொண்டால்
இப்படியென்றொருவார்த்தைச்சொல்லொணாதா
எல்லோர்க்குநலந்தேடி யிசைந்தாயம்மா
செப்புமொருநிஜநிஜந்தா னவனாநீயுஞ்
சேர்ந்ததினால்வெகுகோடி பலனைப்பெற்றோம்
கொப்பெனவேயவரிடத்தினிற்போய்நாங்கள்
குணமுடனேசேர்வைசெய்து கூட்டிவாரோம்

வசனம்.

மகாசந்தோஷம் மகாசந்தோஷம் - ஆனால் நமதுகுலதெய்வமாகிய சுப்பிரமணியக்கடவுளை நீயணைந்துகொண்டது நல்லபாக்கியந்தான் - ஆகிலுமெங்களுக்கு இப்படியென்றொருவார்த்தை சொல்லக்கூடாதோ இப்போதுநீசொல்லிவந்ததெல்லாம்நிசந்தான் நாங்கள் அவரை இவ்விடம் அழைத்துவருகிறோமம்மா வள்ளித்தாயே (வள்ளிவசனம்) நல்லதப்படியே அழைத்து வாருங்கள் தோழிமார்களே,

பாங்கிமார்சொல் விருத்தம்.

அருமையுடனிங்குவந்த வேல்க்குமாரா
அந்தரங்கமாகவும்வந் திங்கேகூடி
மருவுதற்கெத்தனைபாக்யம்பெற்றோம்நீரும்
வரக்கருணையின்றுபெற்றோம்வறுமையற்றோம்
கருணையுடன்வள்ளியைநீர்கைவிடாமற்
கலந்தணைந்துசேர்த்துக்கொள்ளுங்கபடில்லாதிப்
பரண்மீதில்வந்திருந்து வள்ளிமீது
பட்சம்வைத்துமெங்களையிரட்சிப்பீரே

வசனம்.

சரணஞ் சரணமையா கழுகாசல சுப்பிரமணியக் கடவுளே போற்றிபோற்றி எங்கள் வள்ளியம்மனைத் தாங்கள்சேரும்படியாய் எத்தனைபாக்கியம்பெற்றோம் இப்போது வள்ளியம்மனிருக்கும் பரண்மீது தாங்கள்வந்து வள்ளிநாயகியுடன்கூடி விளையாடியிருந்து இரட்சித்து எங்களையும் பாதுகாக்கவேண்டும் சுப்பிரமணியக்கடவுளே சுப்பிரமணியர்-வசனம்) அப்படியேபோவோம் வாரும்பாங்கிமார்களே,

பொதுகண்ணிகள்-இ-ம்-சாரங்கம்-ரூபகதாளம்.

ஜாடையறிந்தேசகிமார்கள்தன்புனத்திற்    போந்தார்
தருணமென்றேவள்ளியிடஞ்சுவாமியும்பின்    சேர்ந்தார்

கூடிவிளையாடிமுத்தங்கொடுத்தவள்ளி மகிழ்ந்தாள்
குமரகுருபரன்கலவிகூர்ந்துசெய்ய வுகந்தான்
சிமிள்முலையநெருடிவள்ளித்திருமார்பிற் கூர்ந்து
சுந்தரவேளதிகநயந்தேடிவிளை யாடி
அமரர்பணிவேலர்வள்ளிக்காசைமெள்ளக் கொடுத்தார்
அன்புவைத்தேவள்ளியும்பின்னதிகமோகந் தொடுத்தாள்

வள்ளியம்மன்சொல்- கண்ணிகள்,

அறிந்துமறியாது குறையதுசெய்யினுஞ்சுவாமி
அன்புவைத்தேஎனையணைந்து ஆதரிப்பீர்சுவாமி
மறந்தெனைவிட்டகலாமல்மறுமுகம்பாராமல்
வாஞ்சைவைத்தெந்தனையணைந்துமருவுமையா சுவாமி

சுப்பிரமணியர்சொல்- கண்ணிகள்,

ஆமெனக்குமுத்தகுடியாளுண்டடி பெண்ணே
அவளினுநின்மேலதிகமாசைவைப்போங் கண்ணே
சிமையிலுள்ளச்சகலத்வசெந்து தனக்கே
தினந்தினமும்வரங்கொடுக்கசெயல்தருவோமுனக்கே
வள்ளிகுறமாதேபச்சமரகதமே குயிலே
மறப்போலவெனக்குவாய்த்தவஞ்சிமட மயிலே
எள்ளளவும்பிரிவதில்லையென்மொழிதப் பாதே
இருவருந்தலங்கடோறுமிசைந்திருப்போ மாதே
கோதையரேகுறவர்தினைக்கொய்ய வருவாரே
குலத்துடனேசேர்ந்துசிற்றூர்க்குடியிலிருப் பீரே
மாதரசேபோயினும்பின்வாஞ்சைமற வாதே
மனதிலென்னைநினைந்தவுடன்வருவேனமலை யாதே

பொது- கொச்சகக்கலிப்பா,

மானைப்பொருவும்விழிவள்ளியிடஞ்சேர்ந்துமுரு
கோனும்புரத்துக்குவட்டருகேசென்றபின்பு
ஏனற்புனங்காத்திருக்கும்வள்ளிதன்னிடத்தில்
கானக்குறவர்கதிர்கொய்யவந்தனரே.

வசனம்.

இந்தப்பிரகாரம் வள்ளியம்மனுக்குச் சிலபுத்திமதிகள்சொல்லி வேழ்விமலைக்கருகாமைச் சுப்பிரமணியர் சென்றபின் இங்கே தினைப்புனத்தில் வள்ளியிடம் அண்ணமார்களுஞ் சிலகுறவர்களுந் தினையை அறுக்கவருகிறவிதமெப்படியென்றால்,

குறவர்-வேடர்-தினையறுக்கவருகிற-கண்ணிகள்.

இ-ம்-மோகனம்-ரூபகதாளம்,

குறத்திகுன்றவர்தினைப்புனத்தினில்கூடியேவிளை யாடியே
கூடையும்பண்ணுங்கத்தியுங்கொண்டுஜாடைபுரைத்துச் சுற்றியே
உறத்திலுவள்ளிக்களத்திற்சேர்த்திங்குயர்ந்தம்பாரஞ் செய்யுங்கள்

உவந்தமேருவென்னவேகதிர்க்குவிந்தவானிலுன்னவே
தாத்துக்குத்தக்கதிட்டமாய்க்கூடுஞ்செனமெலாம்வெகுசட்டமாய்,தான்சுமையெடுத்திட்டனர்வள்ளிமானையுமழைத்திட்டனர்.

அண்ணமார்-வசனம்,

அகோவாருமம்மா வள்ளிநாயகி நாம்பயிரிட்ட தினைக்கதிர்களை எல்லாம்கொய்து அவரவர்கள் சுமையைத் தலையிலெடுத்துக்கொண்டு சிற்றூருக்குப்போகிறபடியால் இனியிவ்விடம் இருக்க வேண்டிய காரியமில்லை கூடவே வாருமம்மா வள்ளிநாயகி (வள்ளியம்மன்-வசனம்) நல்லது அப்படியே வருகிறேன் நடவுங்கள் அண்ணமார்களே.

வள்ளியம்மன்சொல்-விருத்தம்.

அறிந்துணாய்பாங்கிகளா யண்ணமார்கதிருங்கொய்து
பறிந்துடன்கூவியூர்க்குப் பண்புடன்வாவென்றாரே
பொருந்தியேயென்னைச்சேர்ந்து புணர்ந்தநாயகன்றான்வந்தால்
வருந்தியேசகியேதேடி வாடுவாரதற்கென்செய்வேன்.

வசனம்.

கேளுங்கள் எனது பாங்கிமார்களே என் அண்ணமார்கள்வந்து தினைக்கதிரைக் கொய்துக்கொண்டு என்னையுஞ் சிற்றூருக்குக் கூப்பிடுகிறபடியால் என்னைச்சேர்ந்த வென்பிராணநாதர் என்னைத் தேடிக்காணாமல் வாடுவாரோ அதற்குதான் என்னசெய்வேன் தோழிமார்களே.

வள்ளியம்மன் புலம்பல்- கண்ணிகள்.

இ ம்-நீலாம்புரி திரிபுடைதாளம்

அன்னமேயென்பாங்கிமாரே என்
அண்ணார்வந்தழைக்கின்றாரே
என்னசெய்வேன்தோழிமாரே அண்ணர்
என்னையுமழைக்கின்றாரே
வேலவனையினிக்காண்பேனோ நானும்
விட்டுத்தனித்திருப்பேனோ
வாலைமுருகனைநானோ விட்டு
மனைக்கெப்படிநான்போவேனோ
பேடிழந்தவன்றிலானேன் நல்லப்
பிணையிழந்தகலையதானேன்
கூடிழந்தபட்சியானேன் மரக்
கொம்பிழந்தகொடியதானேன்
பானைவந்துதேடுவாரோ வேலர்
பாதவித்துவாடுவாரோ
வெறுந்தினைப்புனத்தைப்பார்ப்பார் இனி

மிஞ்சிப்போச்சுதென்றன்னம்வேர்ப்பார்
கண்டறப்பிப்போவோமென்றால் அண்ணர்
கடிந்துகோபமாவாரென்றால்
விண்டுமெனக்கேசலாமோ வடி
வேலர்மனமென்னலாமோ

வசனம்.

ஆகோவாரும் பாங்கிமார்களே என்பிராண சிநேகிதராகிய வடிவேலரைக்கண்டு விடைபெற்றுக்கொண்டு ஊருக்குப்போக வேண்டுமானால் அண்ணர்களடிக்கடி கூப்பிடுகிறார்கள் அவர்களுக்குத் தெரிந்தால் கடிந்தவார்த்தைசொல்வார்கள் இதுக்கென்ன செய்யலாம் பாங்கிமார்களே (பாங்கிவசனம்) ஆனால் வாருமம்மா வள்ளித்தாயே சுப்பிரமணியக்கடவுள் ஒருவேளை இங்கேவந்து உன்னைக்காணாதிருந்தால் சிற்றூருக்குவருவார் வந்தால் உன்னையவரிடஞ் சேர்க்கிறோம் இப்போது போகலாம் வாருமம்மா வள்ளித்தாயே.

வள்ளியம்மன்சொல்-விருத்தம்.

என்றயராமாரிடத்திற்சொல்வேனையோ
இன்னம்வடிவேலர்வரவில்லையேநான்
சென்றிடச்சிற்றூருக்குக்காலேகவில்லை
சீக்கிரமாயெனையண்ணாரழைக்கிறார்கள்
நின்றுநின்றுபார்த்தாலும்போய்த்தான்திரும்
நினைந்துநானழுதாலும்வருவதில்லை
அன்றில்களேகிள்ளைகளேபோய்வாரேநான்
அன்பர்வந்தால்வர்தனக்கிருளுவீரே.

வசனம்.

ஆகோவாருங்கள் மயில்கள் குயில்களே பட்சிகளே மிருகங்களே என்பிராணநாதரிங்கென்னைத் தேடிவந்தால் உம்மைக்காணாமல் வள்ளிமயங்கித்தேடி ஊருக்குப்போனாள் நீர்வந்தால் சிற்றூருக் கிதமார்க்கமாய் வாச்சொன்னாளென்று சொல்லுங்கள் பட்சிசாதிகளே,

வள்ளியம்மன்சொல்-கண்ணிகள்.

இ-ம்-சங்கராபரணம்-அடதாளம்,

கோகிலமேகிள்ளைகாள் என்சுவாமி
குறித்தெனைத்தேடிவந்தால்
வாகுடன்சிற்றூர்க்கு நான்போகும்
வழிமார்க்கஞ்சொல்வீர்களே
ஆடவரானைத்தன் புனத்தனில்
ஐயோகாணோமென்று
தேடியேயிங்குவந்தால் நான்போகிற

திசைகண்டுசொல்வீர்களே
மாங்குயிலேகிளியே என்னைச்சேர்ந்த
மன்னர்தேடிவந்தால்
பாங்குடன்சிற்றூர்க்கு நான்போகிற
பாதையைச்சொல்வீர்களே
கும்பிட்டேன்மானினமே சுவாமி
குகனிங்கேதேடிவந்தால்
கும்பிட்டுச்சிற்றூர்க்கு வரச்சொல்லிக்
கொண்டாளென்றேசொல்லுவீர்
மாடப்புறாவன்னமே என்னைச்சேர்ந்த
மன்னவர்தேடிவந்தால்
நாடுயர்சிற்றூர்க்கு நான்போகிற
நன்மார்க்கஞ்சொல்வீர்களே
விள்ளும்பசுங்கிள்ளைகாள் எங்சுவாமி
வேலவர்தேடிவந்தால்
நில்லாமற்சிற்றூர்க்கு வரும்படி
நீங்களும்சொல்வீர்களே
பாங்கியுடன்சேர்ந்து சிற்றூருக்கு
பரதவித்தேகுமென்னைச்
சேர்ந்தநாயகன்வந்தால் என்சேதி
தெரியவுஞ்சொல்வீர்களே
அன்புள்ளவன்னங்களே என்சுவாமி
ஆண்டவர்தேடிவந்தால்
நம்பினோருறுங்களை வழிமார்க்கம்
நன்றாய்ச்சொல்வீர்களே

வள்ளியம்மன்சொல் கொச்சகம்.

கூவுமயிலினமேகூர்ந்தகருவண்டினமே
மேவியென்னைச்சேர்ந்தணைந்தவேலவனுரிங்குவந்தால்
ஆவிபதறுமலாதரவாய்ச்சேதிசொல்லி
மாவிசயசிற்றூர்க்குவரச்சொல்லிசொல்வீரே.

இதுவுமது - கொச்சகம்.

அன்னமேகிள்ளைகளே அழகுசிறைவண்டினமே
பொன்னுலகின்வேலிறைதப் புனந்தனிலேவந்தாக்கால்
கன்னிவள்ளியுஞ்சகியுங்கானகத்தைவிட்டேகி
செந்நெல்வளர்சிற்றூர்போய்ச்சேர்ந்தாளென்றுசொல்வீரே,

வசனம்.

ஆ-ஆ அன்னங்களே நாரைகளே மயில்களே குயில்களே மாடப்புறாக்களே வண்டுகளே மான்களே உங்களை நான் கும்பிடுறேன் என்னைச்சேர்ந்தணைந்த என்பிராணநாயகராகிய சுப்பிரம

னியக்கடவுள் என்னைத்தேடிவந்தால் மிகவும்பாதவித்து வாடிபா ங்கிமாரும் வள்ளியும் அண்ணமாருடன் சிற்றூருக்குப் போனார் களென்று இந்தவழியையுங்காண்பித்து நான்சொன்னதாய் என்பி ராணநாயகருக்கு என்னைவேண்டி நீங்கள் சொல்லவேண்டும் பட் சிகாளே,

பொது-விருத்தம்.

வற்றுதவேழ்விமலைக்குடிசிற்றூர்க்கு
வள்ளியம்மன்வந்தபின்புவளமையாகப்
பெற்றோர்நம்பிமாராஜேந்த்ரன்றானும்
பிரியமுறுமகளையெடுத்தணைத்தேமுத்தம்
சற்றேதந்திடுந்தாயேஎனவுங்கொஞ்சிச்
சார்ந்தகுலவேடரெல்லாந்தான்கொண்டாட
குற்றமில்லாமனையையும்விட்டகன்றிடாமற்
குளிர்ந்துமகிழ்ந்திருமெனவேபுகழ்ந்தாரன்றே,

வசனம்.

இந்தப்பிரகாரம் வள்ளியம்மன் பட்சிகளோடு சொல்லிக்கொ ண்டுவந்து தங்களிருப்பிடமாகிய சிற்றூருக்குவந்து சேர்ந்ததுந் தாய்தகப்பனாகிய நம்பியமகாராஜனும் நங்கைமோகினியும் சில வேடர்களுஞ் சந்தோஷமடைந்து வள்ளியம்மனையெடுத்து முத் தங்கொடுத்துப் புகழ்ந்தும் மனையி லிருமம்மாவென்று சொல்ல வள்ளியம்மன்சொல்லுகிறவிதங்காண்க,

வள்ளியம்மன்சொல்-விருத்தம்.

மாதாவேஎனைவளர்த்ததாயேவுந்தன்
மகிமையினாற்றினைக்காத்துவந்ததாலே
பேதாதிபேதங்கள்வந்ததில்லைப்
பின்னையொருமயக்கமில்லைப்பிணியில்லை
ஆதாரமாகவுந்தன்றனைக்காணுமல்
அங்கமதுமெலிந்ததல்லாலருளக்கேளு
கோதில்லாவுந்தனைநான்கண்டபோதே
குளிர்ந்ததெந்தனுடமனமுங்குளிர்ந்ததின்றே.

வசனம்.

அகோவாருமம்மாதாயே நான் தினைப்புனங்காத்திருந்ததிற் பேதங்களில்லை உன்னைக்காணாமலிருந்ததே என துதேகமெலிந்து மனம்வேறாயிருந்தது இப்போதுன்னைக்கண்டபோதே என்சரீர மும்மனதுங்குளிர்ந்ததம்மாதாயே(நங்கை-வசனம்) அப்படியே நல்பாக்கியம் வேலவர்கிருபையால் வீட்டிலிருமம்மாதாயே,

பொது-வசனம்.

இந்தப்பிரகாரம் சிற்றூரில் வள்ளியம்மன்சேர்ந்து தாயாரிட மிருக்கும்போது தன்னைச்சேர்ந்த வேலர்வரக்காணோமென்கிற

தாய் அவர்மீது கோபங்கொண்டு பாங்கிமாரோடு பிரலாபிக்கிற விதமெப்படியென்றால்,

வள்ளியம்மன்சொல்-தரு-இ-ம்-சுத்ததோடி-ரூபகதாளம்,

பல்லவி.

இன்னம்வரக்காணேனேசேடி எம்பிராணநாதர்
இன்னம்வரக்காணேனேசேடி.

அநுபல்லவி.

அன்னமுங்கசப்பாச்சே ஆருடன்சொன்னாலுமேச்சே (இன்)

சரணங்கள்.

மறக்கமனம்வருவ தில்லையே எந்தன்கண்ணில்
உறக்கம்வருவ தில்லையே
இறக்கமில்லாததேனோ என்மேல்விரோதத்தாலோ (இன்)
காதமோதூரமுந் தானோ என்னைத்தேடிக்
கர்த்தன்வாராதது மேனோ
மாதேஎன்பாங்கிமாரே மன்னனிடஞ்சொல்வீரே (இன்)
மானேஎனைத்தினைப்புனந்தேடி வந்தவேலர்
வாராதிருப்பதென்ன சேடி
ஏனோயென்றன்மீதிற்கோபம்என்சொல்வேனவர்பிரதாபம் (இன்)

விருத்தம்.

புளகமுலையிரண்டுவிம்மிப்பசுமைபூப்ப
பூசஞ்சவ்வாதுங்கதம்பப்பொடிவாசங்
களபசுகந்தாதியெல்லாம்பொருந்தியும்வேர்வை
கலந்தோடமன்மதன்வேள்சரங்களைப்பாய
பளகுமடமாதரையுமேசத்தென்றல்
பாய்ந்துபுலிபோற்சீறப்பசுந்ததோகை
இளமயில்போல்வள்ளியும்பஞ்சணையிற்சேர்ந்தே
ஏங்கினாள்விரகமுகங்கொண்டேங்கினாளே.

பொது-கண்ணிகள்-இ-ம்-மோகனம்,

அடதாளம்.

வரச்சொல்லிச்சொல்வாள் இன்னமுமவர்
வரவில்லையென்பாள்
உறக்கமும்நினையாள் தனதுநெஞ்சம்
உருகிநொந்திடுவாள்
பூமலர்முடியாள் ஆவின்பாலைப்
புகட்டியுங்குடியாள்
தாமலாகிரியாள் மதன்காமக்
காய்ச்சலின்குறியாள்
சந்தனங்கரைப்பாள் அதைக்கையால்
தணலாரியிறைப்பாள்

சித்ராங்கழிப்பாள் அணிவட்டத்
திலர்தமுமழிப்பாள்
அன்னமுமருந்தாள் கனிரசம்
அமுர்தமும்பொருந்தாள்
பொன்னணிதுறந்தாள் மைவிலாயம்
போனதுமறந்தாள்
இதுவென்னகுதோ வள்ளிக்குவந்த
இடரும்நீங்காதோ
மதிமோசமென்றார் தாய்தந்தையிவ்
வகைபார்ப்போமென்றார்

பொதுவசனம்.

இந்தப்பிரகாரம் வள்ளியம்மல் விரகவாதனையி லழுந்தியிருக்கும்போது தாய்தந்தையர் இதுஎன்னமோ கானகத்தில்வந்தயிடரோ அல்லது மருளோவென்று பூசைகள்போட்டுப் பார்க்கிறவிதமெப்படியென்றால்.

விருத்தம்.

ஐயனார்தனக்குமன்னையுங்கன்னிமார்க்கும்
அஷ்டதிசை தஷ்டதெய்வமதற்குத்தங்கள்
மெய்பதியாய்விளங்குகுலதெய்வம்வெற்றி
வேலர்தெய்வந்தனக்குமெத்தவேண்டிவேண்டி
கைக்குளிராணிக்கைக்குறவர்கட்டிக்
கருங்குழலாள்வள்ளிசிறகந்நிமீதோர்
வெப்பகறப்பனுகாமல்புலம்பிடாமல்
மெலியாமற்களிபாட்டம்விருப்பினோரே

பொதுக்கண்ணிகள் இ-ய-சங்கராபரணம்-ஆதிதாளம்.

கொண்டாடிப்பூசையிடத்தெம்பிட்டாரே கானக்
குறவரெல்லோருங்கூடிக்கும்பிட்டாரே
பண்டாரப்பெட்டிகையிலெடுத்தாரே நல்ல
பண்புடையகோவிலில்வந்தடுத்தாரே
சம்பிரவரிசைகழுப்பதெடுத்தார் லாடத்
தம்பிரானுக்குப்பொங்கல்தனைப்படைத்தார்
அம்பாரம்போல்முட்டைபொரித்துவைத்தார்குடத்தில்
அள்ளியேதேன்பால்பழமும்உரித்துவைத்தார்
செங்கரும்புமிளநீருங்குவித்துவைத்தார் சாவல்
செங்கிடாயிருநூறுஞ்சமைத்துவைத்தார்
வங்கியும்வீச்சரிவாளுஞ்சமுகாடும் சொர்ண
மணிக்கட்டிவல்லயங்கப்பரையோடும்
கன்றுக்குட்டியிருநூறுஞ் சத்தியாய்வைத்தே நல்லக்
கதிபுடன்சாராயக்குத்தியும்வைத்தே





மங்கையர்குறவர்கூட்டிக்கூக்குரலிட்டே வாயி
வந்துநிலைச்சுற்றியாடிக்குலைவையிட்டே
அங்கையுடன்பொங்கல்வைத்துத்துண்டினாரே சற்றுத்
தம்பிரான்கள்பெயர்சொல்லிவேண்டினாரே
வீரகாளிவனப்பேய்ச்சிசெண்பகவல்லி இந்த
வேளைக்குவந்துதவும்பாதாளமல்லி
ஆரபாரக்கோட்டைமலைக்கருப்பசாமி வெற்றி
ஐயன்மாடசாடயிருளப்பசாமி
காவனத்திலட்டதிக்கிலுள்ளதெய்வமே என்று
கையெடுத்துவேடர்கள்போற்றிசெய்துமே
சென்னிவணங்கிக்கும்பிட்டுக்கையெடுத்தார் வேடர்
செழிப்பாசபூசைபோட்டுத்தீபங்கொடுத்தார்
சன்னதங்கொண்டெல்லோருங்குதித்தாட வள்ளித்
தாயுமசைந்தருட்கொண்டுமகிழ்ந்தாட
நன்மைசெய்யுங்கழுகுமலைக்கந்தவேளை என்றும்
நாடிநோக்கிக்கும்பிடுவாளந்தவேளை

விருத்தம்.

குன்றவர்குறவரெல்லாங் கும்பிட்டன்புடனேபோற்றி
நின்றுடன்விபூதிவாங்கி நிச்சயங்காப்பாயென்று
கன்றியேமெலிந்தவள்ளி நற்றிகைதனக்குப்பூசி
வெற்றியாய்மனைசேர்ந்தன்ன மெலிந்திடாதிருந்திட்டாரே

இதுவுமது - விருத்தம்.

இருப்பள்வள்ளியெழுந்திருப்பள் மறங்கொள்ளாமை
எக்கமொடுகுகனைமன மதெண்ணியெண்ணி
மருக்குழலில்முடிக்கறியாள் வுடலைப்பாராள்
மறக்கவலைதீர்த்தறியாள் வகையாய்நெஞ்சம்
உறக்குமொருகையைக்கன்னத்தில்வைத்தே
உடல்மெலிந்தேயிரவெல்லாமருவிப்போக
பெறக்கிடவேகனவுகண்டு முழித்துவாடி
பித்தரைப்போலாசைகொண்டுபிதற்றுவாளே

இதுவுமது-விருத்தம்.

இப்படிவள்ளியும்புலம்பித்துயில்கொள்ளாமல்
இரவெல்லாம்வருந்திமதிமயங்கிக்குன்றி
எப்படிநான்சகிப்பேனென்மனதென்றெண்ணி
ஏக்கமுடன்வள்ளியம்ம விருக்கும்போது
அப்புறத்திற்சென்றவடி வேலர்தாமும்
அவசரமாய்த்தினைப்புனத்தினருகேவந்து
செப்பமுடன்வள்ளியுஞ்செந்தினையுங்காணூற்
தியங்குவார்தமதுமதிகலங்குவாரே

வசனம்.

இந்தப்பிரகாரம் வள்ளியம்மன் சிற்றூரில் விரகவேதனைப்பட்டிருக்கும்போது அங்கே தினைப்புனத்தில்வந்துபார்த்து வள்ளியம்மனைக்காணாமல் சுப்பிரமணியக்கடவுள் சொல்லுகிறவிதமெப்படியென்றால்-

சுப்பிரமணியர்சொல்-கட்டளைக்கலிப்பா.

நாதுமாதனைப்பூர்த்ததுமிந்திடம்
தானும்யானுமேகூடினதிந்திடம்
கோதுங்கொண்டைக்கலைந்ததுமிந்திடம்
கொம்பிறுனைப்பாய்ந்ததுமிந்திடம்
மாதுமஞ்சள் துவண்டதுமிந்திடம்
மங்கைதானுமருவினதிந்திடம்
காதினோலைகழன்றதுமிந்திடம்
காமராஜன்பிரிந்ததுமிந்திடம்

வசனம்.

ஆ-ஆ- இதுதானேதினைப்புனம் இங்கேதான்வள்ளியும்நானும் ஆசைதீரக்கூடிவிளையாடினோம் இந்திடத்தில் இருப்பாளென்றுவந்தேன் இப்போது காணோமே இதற்கு நானென்னசெய்வேன்.

சுப்பிரமணியர்சொல் - விருத்தம்.

மனதில்நினைந்தாசைகொண்டு வந்தேனிங்கு
வள்ளியுந்தான்பரண்மீதிற் காணேனென்ன
தினைப்புனத்திற்கதிர்களையுங் கொய்துக்கொண்டு
தேன்மொழியைக்கூட்டியவர் சென்றாரோதான்
மனத்தகவேனாசையுங்கே ளாமலுமைக்
கண்டகனாப்போலிருக்குதேதானையோ
தனித்தவள்ளிபாங்கியரு மென்னைவிட்டுத்
தான்சென்றாற்போலிருக்குந் தன்மையாச்சே

வசனம்.

ஆ-ஆ- இதுஎன்னமாயம் நான்நினைத்துவந்த வள்ளிநாயகியுந் தினைக்கதிரையுங்காணோமே அல்லது அவளுடைய அண்ணமார்கள் தினையறுத்துக்கொண்டு அவளையுங் கூட்டிக்கொண்டு போனதுபோற்காண்கின்றது இதுஎன்ன உண்மைகண்டகனவைப்போலப்பாங்கிமாருடன் வள்ளி நம்மைவிட்டுப்போனாளே இதற்கென்னசெய்கிறது.

சுப்பிரமணியர்சொல்-தரு-இ-ம்-கேதாரகௌளம்.

ஆதிதாளம்.

எங்குபோனாளோ வள்ளியைக்காணோம்
எங்குபோனாளோ

கொங்கார்தினைப்புனத்திற் - சிங்காரமாயெனது
பங்காயிருந்தவள்ளித்தங்கமலையைவிட்டு (எங்கு)
மதிமுகவசீகரத்தாள் வள்ளிமையத்தாங்கும்,
வளர்பரணமேவுங்கம்புகாள்
சதியோசம்மதியோ நான்செய்குறை
தானோஎன்விதியோ
பொறுவாயிருந்துநிஜ மதுவைசொல்லுங்களிந்தச்
சதிகாரிபோனவழி எதுவோதெரிந்ததில்லை (எங்கு)
வாசநறுபெண்ணோ வள்ளியெனுநன்
வனத்தினைபுனத்தமானோ
பாசமிருகநீரோ பாதகிபோன
பாதையைச்சொல்வீரோ
ஆசைகொண்டவனுக்குரோஷமுமில்லையென்று
மோசஞ்செய்தெனையிவ்வேஷஞ்செய்தபாதகி எங்கு)
நீநான்சொல்வழியே தினைக்கதிரை
நித்தங்கொய்யுங்கிளியே
ஆதாரநீயன்னமே இன்றுவென்று
அறிகிலீரோமுன்னமே
ஏதேனுமென்மையபிராதோவல்லாதென்ன
சூதோஎன்சத்தங்கேளாதோகூப்பிட்டதும் (எங்)
தீராதமோகம் தற்றெனைக்கூடிச்
சேர்ந்தாள்சம்போகம்
வாரேனென்றுரைத்தே போனவுடனே
வந்தேனந்தாத்தே
ஆறுதந்தியையைவத்து நீறுநீருக்கியென்னைப்
பாராமலோர்வசனங்கூறுமற்றனிவிட்டு (எங்கு)

சுப்பிரமணியர்சொல் - விருத்தம்.

அடக்கமுடன்வெலியிட்டுப் பயிரைநட்டால்
அழிப்பதுதானெங்குமுண்டோ வதுபோல்முத்து
வடக்கநகமாலைவள்ளி போறேனென்றோர்
வார்த்தையுஞ்சொல்லாமலிந்த வனத்தில்விட்டு
நடக்கமனம்பொருந்திலளோ தனியேஐயோ
நட்டாறுதஞ்சமென விட்டாள்நானிவ்
விடத்தினின்றேயினம்பிரிந்த மான்போலானேன்
என்செய்வேனினிமேலு மென்செய்வேனே,

வசனம்.

ஆ ஆ உலகத்தில் வேலிவைத்தல்லவோ பயிரிடவேண்டும் அ
துபோல இந்தவள்ளிக்கு நானொருவேலியாயிருக்க என்னைநட்ட

நதியில்விட்டதுபோலச் செய்துவிட்டுப்போகமனம்வந்ததல்லவா·
சுப்பிரமணியர் சொல் தரு-இ-ம்-புந்நாகவராளி- ஆதிதாளம்
சொருகுகொண்டையழகி என்மன
துருகு துருகுதிளகி
அருகுமாமலர்மேலணைந்துசுகந்தந்து
ஆரபாரத்துடன்வாரிமுடித்தமலர்ச் (சொருகு)
சரிகைச்சேலையுடையும் மயிலின்
சாயலன்னநடையும்
உருவினரம்பைத்துடையும் கையால்
ஒருபிடிக்குள்ளிடையும்
மருவிமருவியென்னை மயக்கிக்கலவிசெய்து
வஞ்சிநீபோனதென்ன வஞ்சமோசொல்லடி (சொரு)
நேற்றியபெண்ணே நீஒரு
வார்த்தைசொல்லாயோகண்ணே
பார்த்துநீதயவுபண்ணே அந்தப்
பாமனறியநண்ணே
பூர்த்தமாமலர்மேற்சேர்த்துக்கையாலணைத்துப்
பார்த்துப்பார்த்துநிதங் கோர்த்துமுடித்தமலர்ச் (சொரு)
வஞ்சியானபாவி மனம்
வைத்தெனைமெத்தமேவி
கொஞ்சிக்கொஞ்சிக்கூவி மோகங்
கொடுத்தமதனதேவி
நெஞ்சில்விரகதாபம்பஞ்சின்தீபோற்பிடிக்கு
தென்செய்குவேனடிபஞ்சமாபாதகி (சொரு)
சுப்பிரமணியர்சொல்-விருத்தம்·
ஏசினதம்பாராமற் கெஞ்சினேனே
எத்தனையோவவள்மனதைத் திருத்தினேனே
ராஜிசெய்தவளுடனே இணங்கினேனே
நான்பிரியேனென்றுவெகு ஞாயஞ்சொன்னேன்
காசலைபாயிருந்தவள்போற் பிரிந்தேகள்ளிக்
கபடநாடகமாகக் கடத்தியென்னை
மோசமதுசெய்தாளே புல்வாயேமானே
முன்னடந்தஞாயமிதை மொழிகுவீரே
இதுவுமது- சந்தவிருத்தம்.
பொருபுலியேமதயானைகளேசிறுபுல்வாய்ச்சூகரமே
வருமனாயேகலைமானினமேகருமலையாமேதிகளே
குருவினமேவுதாரிகளேமயில்கோகிலமேகிளியே
ஒருகுறமாமயில்வரும்வழியதிகிலேனுரைசெயுமெனதிடமே
(வ-ம்) ஆஆ வள்ளிப்பெண்ணேநீஎன்னையேசினதும்பாராமலுன்

உனக்கெஞ்சியும்மநோராஜிசெய்து உன்னைமருவினேனே நல்லது ஓகோபார்த்தீர்களா- காடுபுலிசிங்கங்களே மான்மளாமேதிகளே நான் அவளுக்குமனதிற்சந்தேகமில்லாமல் ஒருநாளும்பிரியேனெ ன்றுசொன்னேன் அப்படிக்கிருக்க என்னைகபடமாற்கமாய்மோ சஞ்செய்தாளே அவள் எந்தவழிபோனாள் சொல்லுங்கள்பட்சிகளே

பொது விருத்தம்.

இப்படிவேலவர்வனத்தில்மயங்கிவாடி
ஏனமுதல்மிருகமும்புட்களையேகேட்டுச்
செப்பமுடன்சிற்றூரில்வழியைநோக்கித்
தீவிரமாயவ்வூரின்வந்துமேதிற்
கப்புறத்திலெவர்களுமேயறிந்திடாமற்
கந்தனும்வந்தம்மன்மனைக்கதித்தொளிக்க
லமப்படியுங்கண்டன்மகல்வந்தாளென்று
வண்மையுடனேபாங்கிமார்வந்தாரே.

(வ-ம்) அகோதெப்படியென்றால் இந்தப்பிரகாரம்சுப்பிரமணியக் கடவுள்தினைப்புனத்தில்வந்துவள்ளியம்மனைக்காணமல்மதிமயங்கி வாடி சிற்றூரைச்சேர்ந்து நம்பியராசன்வீட்டில் ஆருமறியாமல் ஒளித்திருக்கஅப்போதுவள்ளியம்மனுடைய பாங்கிமார்கள்கண் டுசுப்பிரமணியரைத்துதித்துக் கேட்கிறவிதமெப்படி யென்றால்.

பாங்கிமார்சொல்- விருத்தம்.

கங்கைபருளியகுமாரகந்தவேளே
கலந்தவர்தான்விலகியெங்கள்கந்நிவள்ளி
மங்கையைவிட்டிருக்கமனம்வந்ததோநீர்
வந்ததுவுநன்றுச்சுவாதாபோற்றி
சங்கையுடனெங்கள்வள்ளியுமைக்காணமற்
சாதமுண்ணவில்லைசந்தனங்கள்வாசம்
அங்கமதிற்பூசியறியாளேஐயா
அவள்தன்னையிப்போதேஅழைத்துவாரேம்.

வசனம். சரணஞ்சரணமையாசேவலங்கொடியோனேதாங்கள் எங்கள்வள்ளியைவிட்டுஇத்தனைநாழிகையெங்கிருந்தீர்கள்வள்ளிய ம்மனிட அண்ணமார்கள்தினையறுத்துயெங்களைகூட்டிவந்தபிறகு உம்மைக்காணமல்வள்ளியம்மன்ஊண்- உறக்கமும்- பரிமளவாடை இதுகளெல்லாமில்லாமல் வாடியிருக்கின்றாளே தாங்கள்விட்டுப் பிரியமனம் எப்படிவந்தது சுவாமி (சுப்பிரமணியர்- வசனம்) நல் லதுஅப்படியா ஆனாலதிசீக்கிரமாய் அவளை அழைத்து வாருங்க ள் பாங்கிமார்களே (பாங்கியர்-வசனம்) சரணஞ்சரணம்மகாபா க்கியம் இதோ அழைத்துக்கொண்டுவருகிறோம் சுவாமி,

வள்ளியம்மனும்-பாங்கியும்வருகிற- கண்ணிகள்.

அன்னையுமறிந்தா அண்ணமார்நித்திரை தெளிந்து

சன்னையாய்த்தாதியுங் கூட்டித்தானிருவரும்
பாதசாரங்குலுங்கிறற் பதறிமுழிப்பா ரென்று
தாதியும்வள்ளியு மெள்ளத்தனிமையநடந்து
நம்பும்வடிவேலர் தன்னை நாடிவந்து கண்டு
கும்பிட்டாளாசைதீரக் குணமுடன்வள்ளி.

வள்ளியம்மன்சொல்- வஞ்சிவிருத்தம்-

மன்னரேசரண மகிபரேசரணம்
மின்னியவடிவேல் வேந்தரேசரணம்
தன்னிகரில்லாத் தனியரேசரணம்
என்னையேயாளு மிறைவனேசரணம்.

(வ-ம்) சரணஞ்சரணம் எனதாசைக்கிசைந்த மன்னவரே சரணஞ் சரணஞ்சுவாமி.வள்ளியம்மன்சொல்-கண்ணி

ஆசைதந்தநாயகனே-அருளாருள் மன்னே
வாசனைக்கடம்பாவெந் தன்மையல்தீர்த்தவா
பாசம்வைத்தயெந்தனை நீர்மோசமுஞ் செய்யவே
பாங்குடநினைத்தருளோ காங்கேயநாதா.

வசனம்- கேளுமென்பிராணநாதாஎன்னைத்தனியேவிட்டிருக்க எப்படிமனம்வந்ததுஇப்படிநான்மெய்வருந்தவும் பார்க்கலாமா சுவாமி (சுப்பிரமணியர்-வசனம்) அகோவாரும்பெண்ணே வள்ளி அப்படி உன்னைமோசஞ்செய்வேனு- நல்லதுஇப்போது நாம் இங்கேயிருக்கக்கூடாது நாம் நமது மலைக்குப்போவோம் வாரும்பெண்ணே (வள்ளிவசனம்) அப்படியேநல்லபாக்கியம்-நடக்கலாம்சுவாமி (சுப்பிரமணியர்-வசனம்) ஆனல்வாரும்பெண்ணே,

சுப்பிரமணியர்-வள்ளியம்மன்-வசனம்.

அகோவாருங்களடி பாங்கிமார்களே இப்போது நாங்கள் எங்கள்மலைக்குப்போகின்றேம் நீங்கள் சந்தோஷமாய் இவ்விடத்திலிருங்கள் பாங்கிமார்களே (பாங்கிமார்-வசனம்) ஆனலப்படியே நல்லபாக்கியம் போய்வாருங்கள் சுவாமி அம்மா வள்ளித்தாயே யெங்கள்மேற் கிருபையிருக்கட்டும்,

சுப்பிரமணியர்-வள்ளியம்மன்-மலைக்குப்போகிற
பொது-மேற்படிக்-கண்ணிகள்,

என்றுபாங்கிமார்கள் செல்லஎழிலுடன் வேலர்
மன்றல்வள்ளிக்கைப்பிடித்து மலையைநாடியே
மெய்க்குறத்திருவஞ்சி நாட்டைவிட்டுமே கந்தர்
மைக்குழல்வள்ளியும் வேழ்விமலையுங்கடந்தார்
பாக்கியம்பேரல்வந்த குறப்பைந்தொடிக்கைவிடாமற்கி
லாக்கியம்பொருந்துஞ்சோலைத்தாவனஞ்சேர்ந்தார்

விருத்தம்.

இவ்வகைவள்ளியுங்குகனுஞ் சேர்ந்தோர்புக்கம்

இருந்திடவேசிற்றூரினங்கைமாது
ஒவ்வியவள்ளியினிற்றயிலும்போது
ஒருபசுவைக்கள்ளனுங்கொண்டோடிப்போனான்
அவ்விரவுகனவுகண்டுவிழித்தாள்கோவென்
றலறிநாட்டன்னுடமேலாடனைத்துங்கட்டி
செவ்வையாய்த்துயின்றவள்ளியெங்கேயென்று
தேடினாள்சிந்தைநொந்துவாடினாளே,

வசனம். இந்தப்பிரகாரம்வள்ளியம்மனுஞ்சுப்பிரமணியக்கடவுளும்சிற்றூரைவிட்டுவழிநடந்து ஒருசோலையிலிறங்கியிருக்க அவ்விடம்சிற்றூரில்நங்கைமோகினிநித்திரையில் ஒருபசுவைக்கள்ளன்கொண்டுபோனபாவனையாய்க் கனவுகண்டெழுந்துப் பார்க்கும்போதுதனதருகே நித்திரைசெய்த வள்ளியம்மனைக்காணோமென்று கூக்குரலிட்டலறி பாதவித்துத்தேடுகிறவிதமெப்படியென்றால்,

நங்கைமோகினிப்புலம்பல்-கண்ணிகள்,

இ ம் கண்டா-ஆதிதாளம்,

ஐயையோஎன்மகளைக்காணேம்மா என்ன
அநியாயமென்மகளைக்காணேமே இப்போ
மாயமோவிதுவென்னவஞ்சகமோ இந்த
மாதுவள்ளியைக்காணேதென்னமோ ஐயோ
எங்கெங்கேபார்த்துப்பார்த்துத்தேடுவேனே வள்ளி
எங்கேபோனாளென்றேங்குவேனே எந்தன்
கற்றிவள்ளியிங்கேதான்துயின்றாளே என்னைக்
கைவிட்டுஎவ்விடமோசென்றாளே சிற்றூர்
மன்னன்நம்பிராஜேந்திரன்வருவானோ இங்கே
மகளேமகளென்றோடித்திரிவானோ இங்கே
கூடியபாங்கிதானுஞ்சென்றாளோ எவனைக்
கூட்டிப்போயெவ்விடத்தில்நின்றாளோ நம்ம
வேடச்சேனைஞ்சிரிக்கவறியாதோ என்னை
மீறிவள்ளிபோனதுந்தெரியாதோ நமக்குப்
பெண்ணொன்றிருக்குதென்றுநினைத்தேனே மகளே
பேசாமற்போகவிட்டுத்தனித்தேனே அன்னம்
உன்னைமற்பூரித்துநானிருந்தேனே பேசாது
ஊமைகண்டகனாப்போலிருந்தேனே இந்தப்
பாவிகள்ளவாளிபின்போனாளோ எந்தப்
பாதகன்கைவசத்திலானாளோ வள்ளிப்
பூவையின்பாங்கியர்நீரறிந்ததுண்டோ சும்மாப்
பொய்யாமைச்சொல்பேசாதிருப்பதுண்டோ இது
போது மேற்படி-கண்ணிகள்,
ஒன்றுநானறியேனென்றோதினாளே அப்போ

துக்கமாதுநங்கைமுட்டிமோதினளே மகள்
சென்றதனியேபோனதெவ்வாறு இதைச்
சீக்கிரம்பார்ப்போமிப்போதனைவோரும் என்று
நங்கைசொல்லவேநம்பிராஜனும் மக்கள்
நலமுடன்வந்தாரனைவோர்களும் அப்போ

விருத்தம்,

சாதியில்லாதவழியிழுக்குஞ்சொல்லுஞ்
சம்பவித்ததெனவேடர்சகலபேரும்
மோதியபல்லெறநெறெனக்கடித்தமீசை
முறுக்கியிடையிறுக்கியே வண்டுருக்கிக்கொண்டு
தீதறவிற்கணைகள்சமுதாடுதொட்டுச்
சிறிவள்ளிதனைத்திருடுந்திருட்டுக்கள்ளப்
பாதகனைப்பிடித்தொருமித்தடிப்போமென்று
பார்த்திட்டார்பலதைத்துடலும்வேர்த்திட்டாரே,

இதுவுமது,

அடர்ந்துநம்பிராஜன்சேனைகளோடேகி
அம்பேத்திவநங்கடந்துஅடுத்தார்கூட
மடந்தையைக்கொண்டோடினவனிருப்பான்சுற்றி
வளையடாநம்மைப்போலோர்மனிதன்றானே
கடந்திடவும்விடுவோமோவென்றல்லோருங்
கண்ணோட்டம்பார்த்தாவங்காதிற்கேட்டும்
தொடர்ந்துகள்ளவேலனைகண்டம்புமாறித்
தொடுத்திட்டார்வள்ளிகண்டுதிடுக்கிட்டாளே,

வ-ம், இந்தப்பிரகாரம்நங்கைமோகினித்துயில்நீங்கிவள்ளியம்மனைக்காணமல்நம்பிராஜனுக்குச்சொல்ல அப்போது ராஜனுங்குறவர்களும்புத்திரர்களுஞ் சேனைசூழ்ந்து வள்ளியைக்கொண்டு சென்ற கள்ளனை பிடிக்கவேண்டுமென்று காலடியைப்பிடித்துவந்து சோலையில்சுப்பிரமணியரும் வள்ளியம்மனும் இருக்கிறதைக்கண்டு மெத்த ஆரவாரத்துடன்கணைகள்தொடுக்க அப்போது வள்ளியம்மன்கண்டுசுப்பிரமணியரிடஞ் சொல்லுகிற விதங்காண்க,

வள்ளியம்மன்-சுப்பிரமணியர்சொல்-விருத்தம்,

எதிரேறிப்படைப்பெருக்கியண்ணமார்கள்
என்றகப்பன்அனைவோருமிக்கேவந்து
மதமீறிக்கணைதொடுத்துப்பொருவாரோ
வல்லகுலதெய்வமென்றுமதித்திட்டாரோ
விதியொன்றும்வாராதுபுலம்பவேண்டா
மெல்லியேஎன்கையில்வேலிருக்க
பதறுதேநீயுமிப்போபெண்ணேவள்ளிப்
பார்க்கிறேன்யமலோகஞ்சேர்க்கிறேனே,

வள்ளியம்மன்-வசனம்.

சரணஞ்சரணமென்பிராணநாதா இதோபார்த்தீரா எந்தப்பனும் எனதண்ணமார்களுஞ்சேனையுடன்வந்து அம்புதொடுக்கின்றார்கள் தாங்கள்குலதெய்வமென்று மனதில்நினைக்கமாட்டார்களே இதற்குநாமென்னசெய்வோம் சுவாமி (சுப்பிரமணியர் வசனம்) ஆனால்வாரும்பெண்ணேவள்ளி அப்படி யாதொன்றும் வாராது நீபுலம்பவேண்டியதில்லை என்கையில்சத்தி வடிவேலிருக்குதல்லவோ அவர்களென்மேல் நெருங்கிவந்தால் அவர்களை எனதுவேலாலெமலோகஞ்சேர்க்கிறேன் பாரும்பெண்ணே (வள்ளி-வ-ம்) ஆ-சுவாமி அப்படிச்செய்யலாமா-எனதுதகப்பனையும்அண்ணமார்களையுங் கொல்லாமல்விடவேண்டும்பிராணநாதா (சு-வ-ம்-) ஆனால்கேளும்பெண்ணே படுகளத்திலேபாரியுண்டோ ஆகிலும் பார்ப்போம்பேசாமலிரும்பெண்ணே-பொது-வஞ்சிவிருத்தம்.

இப்படிவேலர் செப்பியபோது
அப்புறம்வேடர் கொப்பெனச்சூழ்ந்தார்

(வ-ம்) இந்தப்பிரகாரம்வேலாயுதக்கடவுள் வள்ளியம்மனுக்கு மனத்திடஞ்சொல்லிக்கொண்டிருக்கும்போது அந்தசமயத்தில்வேடர்கள்வந்துசூழ்ந்தவிதமெப்படியென்றால்.

பொதுத்தாழிசை-விருத்தம்.

கைக்குளேவந்தெதிர்பட்டாணிங்கேகள்ளன்காணிவனென்னவே
கானக்குன்றவர்நம்பிராஜனும்வானைத்தாவியமீனைப்போல்
எக்கியேநடைமீறியேவந்துவிற்கணைகளையேவியே, இவனைக்கொல்லவொருவன்போதுமேகமாய்ப்படைவேண்டுமோ
சிக்கிக்கொண்டபின்விடுவோமோவென்றீரமாகியசண்டைகள்
செய்யவேகந்தசாமிசிறித்திருக்கைவேல்கொண்டெறிந்திடத்
தர்க்கம்பண்ணியவேடர்களும்நம்பிராஜனும்பட்டுருவியே
சாய்ந்துமாய்ந்துயிரோய்ந்துகானிற்றனித்தனியிறந்தார்களே.

விருத்தம்,

இகல்புரிந்தவேடரெல்லாஞ் சத்திவேலுக்
கிறையாகப்போனதின்பின் னெதிரேநின்று
திகிரிதனைத்துளைத்ததிலோர் குகையுண்டாக்கிச்
செல்விவள்ளிதன்னையதிற் சேர்க்கக்கண்டு
அகமதனிற்றீராதத் துயராயெண்ணி
அண்ணன்மார்தகப்பனைநினைத்தழுதுவாடி
மிகவுருந்தியேங்கிமனந்தேம்பிவிம்மி
விழிகள்புனற்சொரியநொந்துவிள்ளுவாளே

(வ-ம்)இந்தப்பிரகாரம் சுப்பிரமணியரும் நம்பியாராஜனும் அண்ணமார்களும் குறவர்களுஞ்சமர்செய்ய அந்தவேளையில்சுப்பிரமணியர்வேலாயுதங்கொண்டு யாவரையுஞ்சங்கரித்தவுடன் தாங்க

ளிருந்தசோலைக்கெதிரில்நின்றமலையைத்துளைத்துக் குகையுண்டாக்கிவள்ளியம்மனை அதில்வைத்தபின் வள்ளியம்மன்தகப்பன் அண்ணமார் இறந்துபோனதைக்கண்டுபிரலாபிக்கிறவிதமெப்படியென்றால் வள்ளியம்மன்புலம்பல்-கண்ணிகள்-இ-ம்-

சங்கராபரணம்-ஆதிதாளம்,

என்னசெய்வேனெந்தனண்ணமாரே நீங்கள்
எந்தனாலேயுயிர்சிந்தினீரே
தன்னவரேஎந்தன் றகப்பனாரே நீரும்
சரந்தொட்டீரோஉயிரிழந்திட்டீரோ
மடிந்தசேதிபெற்றவளைக்கேட்டால் வீணாய்
மாளுவாளேகதறிவீழுவாளே
உடன்பிறந்தஞ்சத்துருவாயிருந்தேன் நீங்கள்
ஒழிந்திட்டீரோவுயிர்களழிந்திட்டீரோ
உங்கள்வலுவெல்லாமெங்கேபோச்சோ உடல்
ஒடியலாச்சோவீணாய் மடியலாச்சோ
தங்கையென்றசொல்லைமறந்திட்டீரோ இங்கே
தளர்ந்திட்டீரோஉயிரிழந்திட்டீரோ

நாரதர்வருகிற பொதுவிருத்தம்,

கற்பனைகாரணமுடிந்தக் கதையையெல்லாங்
காணவந்தநாரதனுங் கந்தவேளை
அற்புதமாய்க்கண்டுநமஸ் காரஞ்செய்தான்
அன்னைவள்ளித்துயரமெல்லா மரிந்தானேதோ
உற்பனசொல்லிவிரனவேலவனைக்கேட்டாள்
உற்றவர்கள்வந்ததும்வேடர்களும்வந்து
மற்பொருதிமாண்டதும்வகையாய்க்கூற
மகிழ்ந்திட்டான்குகனைமெள்ளப்புகழ்ந்திட்டானே

(வ-ம்) இந்தப்பிரகாரம்வள்ளியம்மன் புலம்பிக்கொண்டிருக்கும்போது நாரதமுனிவர் சுப்பிரமணியரிடத்தில் வந்துகண்டுஇங்கே நடந்தகாரியங்களைக்கேட்டுச் சந்தோஷமடைந்து சொல் லுகிறவிதமெப்படியென்றால்

நாரதர்சொல்-விருத்தம்.

கைவடிவேல்நீலமயிற் கந்தநாதா
கானகத்தில்வள்ளிதனைக்கண்டாலங்கு
தெய்விதமாய்க்கலியாணஞ்செய்யாமல்நீர்
திருவிளையாட்டாடுதற்கோர் சிந்தைகூர்ந்து
மெய்வடிவம்பொய்வடியாய்க்காட்டிவீணாய்
வேடருயிர்வேலினுக்கே யூட்டிச்சும்மா
மைவிழிமானையுங்குகையி லடைத்திரிப்பீர்
மாண்டவரையெழுப்பிவள்ளி மணஞ்செய்வீரே

(வம்) சரணஞ்சரணமுமையா கழுகாசலக்கந்தரே காணவரிடத்திற்போய் வள்ளியைமணஞ்செய்யாமல் மெய்யுருமாறிபோய்வேடம்பூண்டு வேடர்களுயிரைவிணாகப்போகச்செய்யலாமா ஆனால் உம்முடைய திருவிளையாடலை யாரறியப்போகிறார் இப்போது வேடர்களையெழுப்பி வள்ளிநாயகியைமணஞ்செய்துக்கொள்ளுங்கழுகாசலக்கடவுளே.

பொதுகண்ணிகள் இ ம்-சங்கராபரணம்- அடதாளம்.

நாரதன்விண்ணப்பஞ்செய்திடுஞ்சேதிதெரிந்திட்டார்வள்ளி
நாயகியால்வேடுவர்க்குக் கருணைபிரிந்திட்டார்
வீரப்ரதாபசம்மாரகுமாரன்திரும்பினார் குற
வேடச்சிக்காயந்த வேடர்க்குதவவிரும்பினார்
மானேகுறமயிலேகிட்ட நீயிங்குவாவென்றார் உயிர்
மாயும்பிதாவண்ணன்மாரை யெழுப்பிப்பாமென்றார்
தேனேகுறவர்க்குயிர்கொடுத்தோமுன்னிமித்தியம் இவர்
தேகமெல்லாம்வச்ரதேகமடியிதுசத்தியம்
துள்ளியவேடரெழுந்திருப்பாரடிபெண்ணே எந்தன்
சொல்வழியாச்சென்றெழுப்பிடுவாயடிகண்ணே
வள்ளியுநான்செய்த பாக்கியந்தானென்றாகும்பிட்டாள்விடை
வாங்கியேதந்தையண்ணாரையெழுப்பத்தெடப்பிட்டாள்
ஊட்டிவளர்த்த உயிர்த்துணையோரெழுந்திருங்கள் எனக்
குற்றதகப்பன்பின்சுற்றமெல்லாமெழுந்திருங்கள்
தாட்டிகமாகியவீரர்களேயென்றுபுகழ்ந்தாள் அந்த
க்ஷணத்தில்வேடரெல்லா மெழுந்தேதுள்ளிமகிழ்ந்தார்
தோத்திரமாம்வள்ளிதன்னைப்புகழ்ந்தெங்கள்தாயே பெருந்
துன்பந்தவிர்த்துயர்வு தந்தகுலதெய்வநீயே
நேத்திரமேஎன்னவேடன்கைகூட்டியேசென்றான் சற்று
நிர்த்தனவேலர்முன்பாகவிட்டேயங்குநின்றான்
அப்போதுசண்முகன்செச்சையும்வாகையுஞ் சூட்டினான்சேவ
லாடமயிலாடதற்சொரூபமக்குக்காட்டினான்
ஒப்பியவேடுவரானந்தக்கூத்தாடிப்பணிந்தார் எங்கள்
உற்றகுலதெய்வசாமியென்றேசொல்லத் துணிந்தார்

நம்பிராஜனும் புத்திரர்சொல் விருத்தம்.

இப்படிவேடங்கொண்டு இவ்விடந்தன்னில்வள்ளி
ஒப்பினர்கூட்டிவந்த தொருவர்க்குந்தெரியாதையா
அப்பனேயுனதுசித்த மாரறிவார்கள்ஞானச்
சுப்ரமண்ணியரேயெங்கள் சொற்பிழைபொறுத்திடீரே

இதுவுமது-விருத்தம்.

தனித்துவள்ளிதனைக்கூட்டி சுவாமியெங்கள்

ஜாதிஜெனமறியாமற் றானேசென்றால்
இனத்திலிகழ்சொல்லுவதுஞ் சரிபோமையா
இப்போதேசிற்றூருக் கெம்மைவேண்டி
மனத்தயவாய்வந்தருகுலதேவரேநீர்
வள்ளிதனைப்புவியறிய மாலைசூட்ட
தொனித்திடவுங்கைப்பிடித்துக் கொடுப்போநாங்கள்
சொற்படியேவாருமையா சுவாமிநீரே

(வ-ம்) சரணஞ்சரணமையா சுவாமி சுப்பிரமணியக்கடவுளே நீர் உம்முடைய சுயரூபத்தைவிட்டுவேற்றுருவங்கொண்டுவள்ளியம்மனை ஒப்பும்படிசெய்து இந்தக்கானகத்திற்கூட்டிவந்தீர் உம்முடையசித்தம் எங்கள்பாக்கியம் ஆனால்எங்கள்வள்ளியம்மனைத்தனித்து எங்கள்ஜாதிஜனமறியாமல்கூட்டிவந்ததுசரியோ அதுசரியல்லஇப்போதுநாங்கள் சிற்றூருக்குஎங்கள்கூடவந்து யாவரும் அறியும்படியாய் வள்ளியம்மனை மணஞ்செய்துக்கொண்டு போகலாம்சுவாமி.

சுப்பிரமணியர்சொல்-கொச்சகம்

வாருமென்றுசொன்னநம்பி மாமனேகேளுமிப்போ
அரியந்தான்நன்றாச்சு கடுகெனவேபோவோம்நாம்
நாரதனேநீர்கூட நன்மைபெறுஞ்சிற்றூர்க்கு
ஏர்பெறவேவந்தால்நா னிசைந்துமணஞ்செய்வேனே

(வ-ம்) கேளுமையாஎனதுசொந்தமாமனாகிய நம்பியமகாராஜனே ஆனால் உங்கள்மனதுபோல வள்ளிநாயகியைமணஞ்செய்யவருகிறேன் போவோம்வாருங்களையா அகோவாரும் நாரதனே நீரும் எனதுகூடவந்திருந்து வள்ளியை மணஞ்செய்துவைத்துப் போகலாம் வாரும்நாரதனே (நாரதர் வ-ம்) மகாசந்தோஷம் அப்படியேதங்கள் உத்தாரப்படி நடக்கவென்று காத்துக்கொண்டிருக்கிறேன் நல்லதுபோவோம்வாருஞ் சுப்ரமணியக்கடவுளே.

சுப்பிரமணியர்சிற்றூர்போய்த்திருப்பரங்குன்றஞ்சேர்தல்
கண்ணிகள்-இ-ம் ஆனந்தபைரவி- ஆதிதாளம்-

வெள்ளியங்கிரியேநம்பிமனைக்கு வடி
வேலர்வேந்தனுகூலமாயிருந்தார்
வள்ளிமணாளன்வந்தான்வடிவேலன்வந்தான் என்று
மகிழ்ந்துவேடுவரெல்லாம்புகழ்ந்துநின்றார்
மாதுநங்கைமோகினிமகளுக்கேர்த்திடும் நல்ல
மாப்பிளையென்றுதலைசாய்ப்புடன்நின்றாள்
ஜாதிஜனமறியசகலபூமியறிய சுந்த
சாமிக்குவள்ளிதன்னைநேமகஞ்செய்ய
பேதமில்லையிவருக்கே பெண்கொடுக்கிறோம் என்று
பெருகிவேடர்புகழ்ந்துநெருங்கிவந்தார்

நீதமுடனே நம்பிராசனுந் துணைவரும் நல்ல
நேசமாகவேலரோடுபேசியிருந்தார்
நன்றாயிருப்பீரென்றநாளுந்தழைப்பீர் என்று
நாதன்வேடர்க்குவரம்போதக்கொடுத்தார்
குன்றுமல்வாழ்ந்திருங்கள் குறைவில்லையென்று சொல்லிக்
கோதைவள்ளியைமணம்பேசிமகிழ்ந்தார்
ஆறுதலர்தனிலேதிருப்பரங்குன்றம் உண்டு
அங்காயதிலேமணஞ்செய்யவுநன்று
கூறுகின்றோமென்றுவடிவேலர்புகழ்ந்தார் அங்கே
குன்றவர்வேடர்களா மென்றுமகிழ்ந்தார்
செவ்வேள்நம்பிராஜனுந் திரமுறுங்குறவர் அப்போ
திருப்பரங்குன்றம்வந்து சேர்ந்துமகிழ்ந்தார்
ஓவ்வுமுகூர்த்தமும்பார்த் துயர்லக்னம்பார்த்து அங்கே
ஒருதிருமணையுஞ்சிங்காரமுஞ்செய்தார்
வாழைக்கரும்புகண்ணாட்டிவர்ண்னப்படங்கள்சேர்த்து மா
மதிப்பிரகாசமின்னக்காவணஞ்செய்தார்

சுப்பிரமணியர் திருமணத்திற்கு பரமசிவன் தேவர்கள்
வருகிற-விருத்தம்.

சுகந்தபரிமளகளப நிறைந்துராத்தநச்
சொற்ணமயமானமணவறைசோடித்து
உகந்தபச்சைத்தோரணம்வீதியினிற்கட்டி
உயர்ந்திரம்வானவர்தேவேந்திரனுமற்று
முகுந்தனுநான்முகனுமுநிவர்களுஞ்சூழ்ந்து
முருகனுக்குமணஞ்சூட்டுமுகூர்த்தங்கண்டு
மகிழ்ந்துசிவன்பார்வதிசமேதராக
மால்மழுவுமேந்தியங்குவருகின்றாரே.

வசனம்.

அகோதெப்படியென்றால் இந்தப்பிரகாரம் திருப்பரங்கிரியில் சொற்னமயமான கலியாணமண்டபஞ்சோடித்து சுகந்தபரிமள வாடைகள்சாத்தி சுப்பிரமணியர் வள்ளியம்மனுக்கும் நல்லமுகூர்த்தம்வைத்திருக்க அதைஅறிந்து மும்மூர்த்திகளும் முப்பத்து முக்கோடிதேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் கின்னரகிம்புருட கெருடகாந்திருவர் முதலாய்சூழும்படியாய்ப்பார்வதிசமேதராக ஈஸ்வரர்வருகிறவிதங்காண்க.

பரமசிவன் பார்வதி தேவர்கள்வருகிற-தரு.
இ-ம்-மோகனம்- ஆதிதாளம்.

பல்லவி.

சம்புசதாசிவன்வந்தார்-வெள்ளிவிடையேறி
சம்புசதாசிவன்வந்தார்.

அநுபல்லவி.

தும்புமான்மழுவேந்தி-அம்பிகையுடன்சேர்ந்து
ஞானவேள்கலியாணநாளென
நாடிமேன்மைவி-சேடமாகிய (சம்)

சரணங்கள்.

தேவேந்திரன்முநிவோர் அரிநாரணன்
தேவியிந்திராணியனைவோர் புடைசூழ
சைவமாதர்கள்வாழ்த்துஞ் சரஸ்வதிபிரம்மதேவன்
நந்திமாமுகனுங் கணநாதரும்
வந்திதுவணங்கிய-சந்த்ரசடாதர (சம்)
தும்புருநாரதரும் சந்திரசூரியரும்
சுக்கிரபகவானும் தவஞ்செய்வோரும்
கிம்புருடாதிபருங் கின்னரானைவரும்
கீர்த்தியாகிய-கோசிகனும் வெகு
நேத்தியாகிய-காசிபனும்கூ (சம்)
முப்பத்துமுக்கோடி தேவர்களும்
முநிவர்களுங்கூடி ஒன்றாய்வந்து
சுப்பிரமணியர்வள்ளி தோகையிருவருக்குஞ்
சுந்தரமாகிய - பந்தலிலேமண
முந்திகழச்செய - வுந்திருப்பரங்கிரி (சம்)

தெய்வயானைக்கு விநாயகர் மணஞ்செய்திகூறல்-விருத்தம்.

பரமனும்பார்வதியும்விண்ணோர்பதியுமாதும்
பங்கையனுஞ்சரஸ்வதியுமாலுமாதும்
சரவணவேள்கந்தனுக்குக்குறப்பெண்வள்ளி
தன்னைமணஞ்சூட்டவிது சமயமென்று
பரசிவனுங்கெஜமுகனையழைத்துநீபோய்த்
தெய்வானைதனைக்கூட்டிவாருமென்ன
விரசுடனேபோயவனு மணமுகூர்த்த
விதமெல்லாங்குஞ்சரிக்குவிளம்புவானே

(வ-ம்) இந்தப்பிரகாரம்முப்பத்துமுக்கோடிதேவர்கள்நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகள் மும்மூர்த்திகளும் பரமசிவன்இவர்கள்திருப்பரங்குன்றம்வந்துசேர்ந்து சுப்பிரமணியர் வள்ளியம்மனுக்குமணமுகூர்த்தவேளையென்றுதெய்வயானையைக்கூட்டிவரும்படி விநாயகமூர்த்திக்குப் பரமசிவன்பார்வதிசொல்ல விநாயகமூர்த்தி தெய்வயானைக்குப்போய்சொல்லுகிறவித மெப்படியென்றால்.

விநாயகர்தெய்வயானைக்குச்சொல்-தரு- இ-ம் தோடி.

அடதாளம்.

உண்மைதான்சொல்லக்கேளாய் தெய்வயானையே
உண்மைதான்சொல்லக்கேளாய்

தன்மையில்லாமற்கந்தன் திருக்கலியாணஞ்செய்ய
உன்மனநோகாம லுகந்தழைத்திடவந்தேன் (நன்)
திரமாய்ப்பெண்ணொன்றிருக்கத் திரும்பக்கலியாணஞ்செய்தால்
இரண்டுகொழுந்திவந்தா லெனக்குச்சந்தோஷம் பெண்ணே-நன்
தேடிக்குறத்தியைக்கொண்டாடித் தம்பிமணஞ்செய்ய
வேடிக்கைசொல்லவென்றே நாடிச்சுறுக்கில்வந்தேன் (நன்)
மண்டலந்தனிலுயர் வகுத்தபிரமனுக்கும்
பண்டுவிதித்தவிதி ரெண்டோரகமானதாச்சே (நன்)
உன்னைப்பிரியேனென்று உரைத்திடுந்தம்பியின்று
பின்னொருத்தியைக்கொண்டால் பேசியிங்காவதென்ன (நன்)

தெய்வானை-கணபதிக்குச்சொல்-விருத்தம்.

நாரதனால்முடிந்ததெனக்கணேசன்சொல்ல
நாயகிதெய்வானைமெத்தநாணிப்பேசும்
தாரமிதோநீரறியாப்பருவமுண்டோ
தருவனத்திற்குறத்திமயல்தாங்காதோடி
வீரமெல்லாமிழந்தவள்காலடிமேல்வீழ்ந்த
விதந்தெரிந்துநாரதன்மேல்விளம்பலாமோ
காரமெல்லாமினியுரைத்தாற்சரியோவாரோன்
கந்தர்மணங்காணவென்றேகழறினளே.

தெய்வானை மனமிரங்கித்-திருப்பரங்குன்றம்-வருதல்- விருத்தம்.

புத்தியென்றெங்கணபதியெதென்டமையா
போற்றிமனந்தேற்றிமெத்தப்புகழ்ந்தேனின்று
சத்திவடிவேல்வாங்கிமயின்மீதேறுஞ்
சாமிமனதிலிசைந்தபடி நடப்பேன்தங்கை
சித்ரவள்ளிதன்னைமணஞ்செய்தெந்நாளுஞ்
சேர்ந்தொருவர்போலிருந்துவாழ்வேனையா
எத்திசையும்புகழ்திருப்பரங்குன்றத்தில்
லெழுந்தருள்வோமிட்சணத்திலியல்பாய்த்தானே.

வசனம். சரணஞ்சரணமையா எனதுஅத்தானே இனியெத்தனைவிதம் நினைந்தாலும் ஆவதென்னமுடியுங்காரியமுடிந்தேதிரும் என்பிராணநாயகர் மனதிற்கிசைந்தபடி நங்கைவள்ளியைமணஞ்செய்து நாங்களிருவருமொருமனதாயிருக்கின்றோம் ஆகையால்திருப்பரங்குன்றம் போகலாம்வாரும் அத்தானே (கணபதிசொல்) நல்லது அப்படியே போகலாம் வாராய்தெய்வானை.

பொது வசனம். இந்தப்பிரகாரம் தெய்வயானை அம்மனும் விநாயகமூர்த்தியும் கழுகுமலையிலிருந்து திருப்பரங்குன்றத்தில் கடையில்வந்துசேர்ந்து பரமசிவன் பார்வதியை வந்தனஞ்செய்து யவர்களும் மனதுகந்து சுப்பிரமணியருக்கும் வள்ளியம்மனுக்குந் திருக்கலியாண சாதனம்நடக்கிறவிதம் எப்படியென்றால்.

சுப்பிரமணியர்-வள்ளியம்மனைத்திருக்கலியாணஞ்செய்யும்
தரு-இ-ம் கேதாரகௌளம்- ஆதிதாளம்

பல்லவி.

திருக்கலியாணமுடித்தார் கந்தர்வள்ளிக்குந்
திருக்கல்யாணமுடித்தார்.

அநுபல்லவி

மருக்கமழ்மலர்கொய்து பெருக்கவிதானஞ்செய்து
மறைவிபரத்தோடு நான்மறைநடத்தியே (திரு)

சரணங்கள்.

சந்தனமரக்கால் நாட்டி முன்னேயா
சாலிமணவரையிற்பூட்டி மிகுப்ரகாச
அந்தப்படிமுத்துப்பந்தல் விதம்வகுத்து
ஆதனப்பீடமும்பொருந்தல் முநிவர்சித்தர்
இந்திரன்விண்ணோர்வேடர் பந்துஜனங்கொண்டாட
இங்கிதமங்கையர் மங்களமும்பாடத் (திரு)
சந்தனத்தாற்றரைமெழுகிக் கோலமிட்டுச்
சதிராய்முக்கோணமழகன் ஒளிபொருந்த
வந்தனையாய்க்கணபதியை நினைந்துவைத்து
வளரும்பரிதியைக் கும்பம்நிறுத்திப்
பந்தனமாகவேதேங் காயுடைத்துவாழைப்
பழமுந்தெட்சணைவைத்துப்பணிந்து வேடர்குழக் (திரு)
சிந்தைமகிழ்ந்திடவும்வேடர் செய்சாத்திரத்
திரமுடன்கொண்டாடக் களிகூர்ந்து
செந்திருச்சேர்ந்திடும்வள்ளியும் கந்தசாமியுஞ்
சேர்ந்துச்சரவணையினும் ஸ்தானம்பண்ணி
வந்துசெபசநால் முறைபனுட்டானஞ்செய்து
மணவரைமீதில்வரக் குணத்தேவர்மலர்பெய்து (திரு)
வேதப்பிரமனும்வந்து முறைப்படி
வேழ்வளர்த்தவுகந்து நன்முகூர்த்தமுஞ்
சாதகப்படியேயறிந்து சுபதினத்தில்
சாந்தியுஞ்செய்யத்துணிந்து அப்போதமர்ந்த
கோதிலாப்பணியணிந் கோனெனும்வேலருக்கும்
குலவிடவேயணிந்து குறமான்வள்ளியருக்கும் (திரு)
மிருதங்கமத்தளமேளம் துத்தாரிக்கொம்பு
முழங்கிடவேகைத்தாளம் வாத்யத்தொனியுஞ்
ஜெகமெங்குநிறைந்திடவே பேரிகைபூரிச்
சேரவுமுழங்கிடவே அந்தவேளையில்
அகமதமகிழ்ச்சியா லனைவருங்கொண்டாடி
ஆரம்பைபூர்வசிமாதர் அப்பாய்மஞ் ஞம்பாடி (திரு)

நல்வரருஞ்சிற்லதகூற நல்வரிமகிழ்ந்து
நியாவரும்களிகூர முநிவர்தேவர்
ஆசீர்வாதங்கள்செய்ய அட்சதைத்தூவி
அருந்தவர்மநமுய்ய பொங்கமுடனே
தாசர்க்குதவுங்கந்தர் தாலியைக்கையெடுத்து
தார்பூண்டமங்கைவள்ளி தன்கழுத்திற்றரித்து (திரு)
அன்ன நடையின்மேனகை திலோர்த்தமை
ஆலாத்திபேற்திடவு மலரயன்வாழ்த்த
வன்னவேடுவர்மகிழ இருபுறமும்
வாணிருந்துபுகழ அப்போதந்தக்
கன்னிவள்ளியைக்கந்தன் கைபிடித்தேயந்தக்
கல்யாணமண்டபம் களிப்புடன்சுற்றிச்சேர்ந்து (திரு)

சுப்பிரமணியர் மணக்கோலங்கொள்ளல்.

விருத்தம்.

கைப்பிடித்துமனமகிழ்ந்துவெகுசிங்காரக்- கலியாணக்கோலமெல்லாங்கருணையோடு செப்பியமா வளமைபெருங் கந்தவேளுந் திரும்பிவந்துமொழிமுறைச்சீர் செய்தபின்பு மெய்ப்பெருசம்பூரணாநந்தங்கொண்டு - விமலனும்பார்வதியும் விண்ணோர்திரளுஞ்சூழ சுப்ரமண்யர் மயிலேறிப் பவனிவந்தார்- தோகையர்கள் சோபனங்கள் சொல்லுவாரே

வசனம். அகோதெப்படியென்றால் 'இந்தப்பிரகாரம் சுப்பிரமணியருக்கும் வள்ளியம்மனுக்குந் திருக்கல்யாணமுடிந்து மயில்வாகனாரூடராய் மணக்கோலங்கொண்டு பவனிவரும்போது சுற்றிலுமெநருங்கிய மங்கலப்பெண்கள் சோபனம்பாடுகிற விதம் எப்படியென்றால்.

சோபனம்பாடுகிற தரு-இ-ம்- ஆதி- ரூபகதாளம்-

சோபனஞ்ஜெய-சோபனஞ்ஜெய-சோபனஞ்ஜெய சோபனம்.
பூபதிவேலாயுதர்மணம்பொருந்தவேமிகச்சோபன (சோப)
வள்ளிதெய்வானையுடன் வாழ்வுபெறச்சோபனமே (சோபன)
புள்ளிமயில்வேலர்வள்ளிப்பொருந்தமிகச்சோபனமே (சோப)
அன்னைதெய்வானைவள்ளி அணைந்திருக்கச்சோபனமே (சோப)
திண்ணமுடன் முருகனும்வள்ளிசேர்ந்திருக்கச்சோபனமே(சோ)

தேவர்கள்-விருந்தருந்துதல்-விருத்தம்.

கந்தரும்வள்ளியும்புகழ்ந்துபவனிவந்து-கருணைவாருதிபொழிந்துகனம்பெற்றோங்க - இந்திரன்மாலயன் முநிவோர்சகலபேரும்- இனிமையுடன்திருவுளப்பிரசாதமன்னம்- பந்திவைத்துபடைத்தூசவர்க்கங்கூட்டிப்- பசிதீர்ந்துகளிகூர்ந்துபல்வீரத்தர்-சந்தனஞ்சவ்வாதுதாம்பூலங்கொண்டு - சாற்றினார்மிகத்தொழுதுபேற்றினரே.

தேவர்களுஞ்-சுப்பிரமணியரும்-வள்ளியம்மனும்
தங்கள்தலஞ்சேர்தல்-விருத்தம்

திருக்கழுகாசல நகரந்தனிலேகந்தன்
தெய்வானைவள்ளியுடன்சேர்ந்தநாளில்
உருக்கமுடன்தேவர்கள்யாவர்களுஞ்சேர்ந்து
உடனேதாமவரவர்தன்பதியிற்சேரப்
பெருக்கியமானிடரிந்தச்சரிதைபாடப்
பெருமையுடன்மங்களசோபனம்பெற்றோங்கத்
திருக்கலியாணச்சிறப்பைக்கேட்போர்க்கென்றுஞ்
சித்திதந்துசெல்வமிகச்சேருந்தானே.

பொது-வசனம்.

அகோதெப்படியென்றால் இந்தப்பிரகாரம் திருப்பரங்குன்றத்தில் மும்மூர்த்திகள் முதல்முப்பத்துமுக்கோடிதேவர்களும்நம்பிராசன்முதலானபெயர்களுங்கூடியிருந்துசுப்பிரமணியக்கடவுளுக்குத்திருமணக்கோலஞ்செய்து அவரவர்களிருப்பிடம்போய்ச்சேர்ந்தபின்சுப்பிரமணியரும்வள்ளிதெய்வானை இவர்கள் தங்கள் கழுகாசலம்போய்ச்சேர்ந்து மங்களகரமா யிருக்கின்றார்கள்.

மங்களம்-இ-ம்-பந்துவராளி-ஆதிதாளம்.

மங்களமங்களமே ஜெயசுப
மங்களமங்களமே

மங்களமங்கரன் வல்லைநாயகிக்கும்
துங்கவள்ளிதெய்வானைசுப்பிரமண்யருக்கும்-மங்களம்
வாமபாகசிவகாமி சோமசுந்தரர்க்கும்
பூமிதேவிமணவாளன் விண்டுவினுக்கும் (மங்களம்)
முப்பத்துமுக்கோடி முநிவர்தேவர்புகழ்
தப்பிலாதுகலை வாணி பஞ்சரத்தாய்க்கும் (மங்களம்)
இந்நாடகந்தன்னை இன்பமாய்க்கேட்போர்க்கும்
வன்மையாய நுதினம் வாசிப்பவர்க்கும் (மங்களம்)
சீருஞ்சிறப்புமுற்ற மநோன்மணிவிலாசவச்சுதனிற்
சீராய்ச்சிட்டச்சு செல்வானைவற்கும் (மங்களம்)
வள்ளியம்மைநாடகத்தை வாசித்திடுவோர்க்கு
புள்ளிமயிலோன்கிருபைப்பொருந்திவாழ்வர்தினம் ம)

வாழிவிருத்தம்.

சத்திவடிவேல்வாழிச்சேவல்வாழி- தாய்வள்ளிச்சரிதைதனைச் சதிராய்க்கூறும்-முத்துவீரப்பகவிராசன்வாழி- முன்னூல்ண்டாக்குவித்தமுதலோர்வாழி- சுத்தியமாய்ப்பூவுலகஞ்செழிக்கவாழி) தோகைவள்ளிதெய்வானைச்சுகமேவாழி வந்துவாழ்தெல்கழுகாசலமும்வாழி-மயில்வாழிகுமரனிதம்வாழிதானே.

வள்ளியம்மைநாடகம்-முற்றும்.

